ரூ. 8.00

திருவள்ளுவர் ஆண்டு 2045 வைகாசி-ஆனி
மே-ஜூன் 2014



# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

பெங்களூருவில் நமது சிறப்பாசிரியர் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களுக்கு
ஸ்ரீ மகாத்மா ஜோதிராவ் புலேய் விருது வழங்கிச் சிறப்பித்த நிகழ்வு : 24-05-2014

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவர் ஆண்டு 2045 | மாதம் : வைகாசி - ஆனி |
| மலர் : 29 | இதழ் : 5 & 6 |


## நம் கடன் பணி செய்து கிடப்பதே!

*காவி உடையில் பொதிந்திருக்கும்*
*தமிழ்மாமுனியாம் ஞானமணி*
*பூவினும் மெல்லிய இதயத்தில்*
*புரட்சி வைரமணி கனல்விடும்*
*மேவிய குன்றக்குடியில் புதுச்*
*சரித்திரம் செதுக்கிய அறிவுமணி*
*நாவினில், நெஞ்சினில்*
*குறள்மறை போல் மணக்கும்*
*"தெய்வசிகாமணி"* – சிற்பி




என்று விளங்கிய குருமகாசன்னிதானம் காட்டிய தடத்தில் நம் பயணம் தொடர்கின்றது. 50 ஆண்டு கால வாழ்க்கைப் பயணம் நிறைவு.

51ஆம் ஆண்டில் அடி எடுத்து வைக்கும் பயணம்.

"வாழ்க்கை உனக்கானதல்ல. உலகத்திற்கானது"

என்று மகாசன்னிதானம் நம்மை ஆற்றுப்படுத்திய துறவு வாழ்வில் 21 ஆண்டு கால நிறைவு! நம் பாதையின் பயணத்தில் பின்னோக்கிய சில நினைவுகள்!

மகாசன்னிதானம் மறைந்த ஓரிரு ஆண்டுகளில், தென்மாவட்டங்களில் சாதிக் கலவரம் வெடித்தது. சாதிக்கலவரம் நடைபெற்ற பகுதிகளில் நமது அமைதிப் பயணம்! பாதிக்கப்பட்ட மக்களுக்கு நம்மால் முடிந்த உதவிகள் செய்தோம்! மேற்கூரை எரிந்து பாதிக்கப்பட்ட

வீடுகளுக்கு எல்லாம் எளிதில் தீப்பிடிக்காத - எரியாத மேற்கூரைகள் அமைக்க அரசு மூலம் நிதி உதவி பெற்று அமைக்க ஏற்பாடு செய்தோம். பாதிப்புக்குள்ளான மக்களை அமைதிப்படுத்தி ஆறுதல் கூறினோம்.

ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு அழித்துக் கொண்டவர்கள் **"தாங்கள் தமிழர்கள் என்பதை மறந்து போனார்கள். தாங்கள் அடித்தட்டு உழைக்கும் வர்க்கம் என்பதையும் மறந்து போனார்கள்"**

மார்க்ஸ் அருமையாகச் சொல்வார். "பிராணிகளின் உலகத்தில் சோம்பேறித் தேனீக்கள் உழைக்கும் தேனீக்களை அழித்துவிடும். ஆனால் மனிதர்களாகிய பிராணிகளின் உலகத்தில் உழைக்கும் தேனீக்களை சோம்பேறித் தேனீக்கள் துல்லியமான தம் உழைப்பின் மூலம் அழித்துவிடுகின்றனர். மோதிக்கொண்ட சொந்தச் சகோதரர்கள் துன்ப நிலையை மாற்றி அமைதி நிலைக்குத் திரும்பியவுடன் பணிசெய்து விடை பெற்றோம். நிரந்தர அமைதி உருவாக்கும் வகையில் நடைபெற்ற பணிகளுக்கு நமது இராசபாளையம் திருவள்ளுவர் மன்றத் தலைவர் கவிஞர் முத்தரசு, இராசபாளையம் கம்பன் கழகத் தலைவர் முத்துக்கிருஷ்ணன், திருவள்ளுவர் மன்ற அந்நாளைய செயல்தலைவர் கோதண்டபாணி ஆகியோர் உடனிருந்து உறுதுணையாகப் பணிபுரிந்தனர்.

"துன்ப அலை எப்போது எங்கு வீசும் என்று சொல்ல இயலவில்லை" சிவகங்கை மாவட்டம் வெள்ளப்பெருக்கெடுத்து மாவட்டமே ஸ்தம்பித்துப் போனநிலை. பல கிராமங்களில் பாலங்கள் உடைந்து ஊருக்குள் வெள்ளம் புகுந்தது. நாம் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனடி உதவிகள், உணவு, மருந்து முதலியவைகள் வழங்கி வெள்ள நிவாரணப் பணிகள் ஆற்றினோம்.

கோவை மாவட்டத்தில் குண்டு வெடிப்பு நிகழ்ந்த தருணம்! அங்கும் அமைதிப்பணிகள் தொடர்ந்தன. பாதிக்கப்பட்ட பகுதிகளை நேரில் பார்வையிட்டோம். ஒரு கட்டத்தில் பதற்றம் நிறைந்த வேளை. நம்மைச் சுற்றிலும் இஸ்லாமிய இளைஞர்கள் "பதற்றமான நேரத்தில் தனியாக வந்துவிட்டீர்களே? என்று அக்கறையோடு கேட்டார்கள். நல்லிணக்கப்

பணிகளுக்கு உறுதுணையாக இருந்தார்கள். மாலையில் கோவை மாவட்டத் திருவருட்பேரவையின் சர்வமதத் தலைவர்கள், காவல்துறை உயர் அலுவலர்கள், பொதுமக்கள் பங்கேற்ற நல்லிணக்கக் கூட்டம் நடத்தப்பட்டது. கோவை மாவட்டம் பதற்றநிலையில் இருந்து இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பியது. சமாதானத்தின் நல்லிணக்கத்தின் விதைகள் அமைதிக் காலத்திற்குள்ளேயே விதைக்கப்பட வேண்டும் என்ற ஆழ்ந்த உண்மை நமக்குப் புலனாகியது.

குடந்தையில் ஒரு பள்ளிக்கூரை தீப்பிடித்தது. இளம் பிஞ்சு மழலை மலர்கள் தணலில் கருகிப்போன துயரச் சம்பவம் குவலயத்தையே குலுக்கியது. அங்கு நாமும் ஓடிச்சென்றோம். நெஞ்சைப் பிழிய வைக்கும் ஒரு நிகழ்வு. எரிந்த பள்ளிக் கூரைக்கு உள்ளே தவித்துக் கொண்டிருந்த இளம் பிஞ்சு மழலை மலர் – "தாரணிகா" என்பது பெயர். தாரணிகாவின் சித்தப்பா நெருப்பு வளையத்துக்குள் புகுந்து அந்தத் தங்க மழலை மலரை அள்ளிக் கொண்டு வருகின்றார். உடைந்து நொறுங்கி சிதறிப் போயிருக்கும் அந்த மழலை மலர் தன் சித்தப்பாவிடம் "என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள் சித்தப்பா. என் சகதோழிகள் நெருப்புக்குள் வெந்துகொண்டிருக்கின்றனர். முதலில் அவர்களைக் காப்பாற்றுங்கள் சித்தப்பா" என்று சொல்லி சித்தப்பாவின் மடியில் உயிர்விட்டாள் "தாரணிகா". மனித நேயத்தின் உச்சநிலையில் தன்னையே மரணத்திற்குப் பரிசாகத் தந்தாள் தாரணிகா.

எல்லாத் தாயின் கருப்பையும் உலகத்திற்கு ஒரு விலங்கைத் தருகின்றது. அந்த விலங்கை எது மனிதனாக மாற்றிக் காட்டுகிறதோ அதற்குப் பெயர் தான் "கல்வி". அந்த நிலையில் மனித நேயத்தின் உச்சம் தான் தாரணிகாவின் மனநிலை.

அங்கு பாதிக்கப்பட்ட துயருற்ற இல்லங்கள் அனைத்திற்கும் சென்று ஆறுதல் கூறினோம். இந்தப் பணிகளில் நமக்கு முழுமையாக உறுதுணையாக விளங்கியவர் நமது பேராசிரியர்.சாமி. தியாகராசன் ஆவார்.

பேராசிரியர்.சாமி. தியாகராசன் சர்வமத பிரார்த்தனைக் கூட்டத்தைக் கூட்டினார். சர்வமதத் தலைவர்களும் பங்கேற்ற அமைதிப்

பிரார்த்தனை நடைபெற்றது. மாவட்ட ஆட்சித் தலைவர்.டாக்டர். ராதாகிருஷ்ணன், குடந்தை ஆயர் பீட்டர் ரெமியூஜியேஸ், இசுலாமியத் தலைவர்கள், திருவருட்பேரவைப் பொருளாளர் சாந்திலால், சர்வமதத் தலைவர்கள் மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

நாகை மாவட்ட ஆட்சித் தலைவர் டாக்டர்.ராதாகிருஷ்ணன் உரையாற்றிய பொழுது, திருவருட்பேரவை நடத்தும் இந்தப் பிரார்த்தனைக் கூட்டத்தோடு நம் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "இளம்பிஞ்சு மழலை மலர்கள் இறைவன் திருவடி நீழலில் அமைதி பெறட்டும். துயருற்ற உள்ளங்களின் காயங்கள் நீங்கட்டும்" என்று கூறினார்.

ஓலைக்கூரை இல்லாப் பள்ளிகளை உருவாக்குவோம் என்று அந்தக் கூட்டத்தில் கொள்கை முழக்கம் வைத்தோம். சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்கள் நிதியினைக் கட்டிட வசதிகளுக்கு அரசுப் பள்ளிகளுக்கு மட்டுமல்லாமல் அரசு நிதி உதவி பெறும் பள்ளிகளுக்கும் வழங்க வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றினோம். அதன் விளைவாய்த் தமிழகம் முழுவதும் உள்ள பள்ளிகளின் மேற்கூரைகள் காங்கிரீட் கட்டிடங்களாக மாற்றப்பெற்றன. தினந்தோறும் பலதரப்பினரும் நடத்திய அஞ்சலி ஊர்வலங்களால் திக்குமுக்காடிப் போன குடந்தையில் அமைதி மேம்பட குடந்தையில் திருவருட்பேரவை நடத்திய அமைதிப்பேரணியில் நமது ஆதீன கௌரவ முகவர் ஆதீனமிளகி மற்றும் அறுவேலி கிராம மக்கள் பலரும் பங்கேற்றனர்.

சுனாமி கணப்பொழுதில் உலகைச் சுருட்டிப் போட்டது. கடற்கரை ஓரக்கிராமங்களில் கணப்பொழுதில் மக்கள் பிணங்களாக மாறிப்போனர்கள். திருச்சி திருக்குறள் பேரவைக் கூட்டத்தில் கலந்து கொண்டிருந்த நாம் உடனடியாக, குன்றக்குடி திரும்பி சுனாமி தாக்குதலுக்கு உள்ளான நாகை மாவட்டத்தை நோக்கிப் பயணித்தோம். அந்நாளைய நாகை மாவட்ட ஆட்சித்தலைவர் டாக்டர்.ராதாகிருஷ்ணன் அவர்களோடு தொடர்பு கொண்டோம். சுனாமி நிவாரணப் பணிகளுக்கு பணம், பொருள், உடை தேவை இல்லை. சேவைகள் செய்ய ஆட்கள்தான் தேவை என்றார்.

நாகைப் பகுதிக்கு கணப்பொழுதில் நூற்றுக்கணக்கான இளைஞர்களோடு புறப்பட்டோம். நமது முகாமில் காரைக்குடி மைய மின் வேதியியல் ஆய்வக முன்னாள் துணை இயக்குநர் டாக்டர். பாலகிருஷ்ணன் வந்திருந்தார்கள். இப்பணியில் திருவாரூர் மாவட்டத் திருக்குறள் பேரவைச் செயலர் மைதீன் கோவிந்தராஜன் முழுமையாய் உடனிருந்து வழிகாட்டிப் பணியாற்றினார். சுனாமிப் பகுதிகளில் உள்ளே நுழையும் அனைவருக்கும் தொற்றுநோய்த் தடுப்பூசி போட்டபின்னரே உள்ளே அனுமதிக்கப்பட்டனர். சுனாமி எவ்வளவு பெரிய கோர தாண்டவம் நிகழ்த்திவிட்டது. சுனாமி அலைகள் தாக்குண்ட ஊர்களில் இருந்து மக்கள் வெளியேற்றப்பட்டனர். பொக்லைன் இயந்திரங்கள் மண்ணைத் தோண்டி பிணங்களைப் புதைத்துக் கொண்டிருந்தன. கடல்நீரில் உப்பி அழுகிப்போன, கொடிய துர்நாற்றமும் வீசும் சடலங்களை இளைஞர்கள் தூக்கிச் சென்று புதைத்தனர். குன்றக்குடி மக்கள் கல்விநிலையத் தலைவர் 80 வயது இளைஞர் டாக்டர்.பாலகிருஷ்ணன் அவர்கள் தம் தோள்களில் அழுகி ஊறிப்போன சடலத்தை தூக்கிச் சென்றார். வேளாங்கண்ணி தேவாலயத்தின் வாசலில் இப்பணிகள் நடைபெற்றன. ஒரு கடற்கரை கிராமத்தில் யாருமற்று ஒரு இளைஞன் புதைகுழிகளைக் காட்டி என் அம்மா, அப்பா, அண்ணன், தம்பி, தங்கை என்று புரட்டிப் புரட்டிப் பார்த்தான்; சலனமற்றுப் போனான். ஊரில் ஒரு மயானம் இருக்கும். ஆனால் சுனாமிப் பகுதிகளில் ஊர்களே மயானங்களாகி இருந்தன. ஊரில் ஒரு இழப்பு என்றால் ஊரைக் கூட்டுவார்கள். ஒப்பாரி வைப்பார்கள். தம் ஊரே இழப்பாகிப் போனால், அழக்கூட மறந்துபோவார்கள். மனம் மரத்துப் போகும்.

இந்தச் சோகங்களில் இருந்து இவர்களை மீளச் செய்கின்ற பணிகளை நம்முடன் வந்த குழு நிறைவேற்றியது. சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஆறுதலும், தேறுதலும், உணவு, மருந்துப் பொருட்கள் முதலியனவும் வழங்கினோம்.

ஆழிப்பேரலை நினைவாக நிதிவேண்டி குன்றக்குடி வீதிகளில் உண்டியல் ஏந்தி வசூலித்தோம். நமது கல்வி நிறுவனங்கள் பொதுமக்கள் என அனைவரின் பங்களிப்பாக சுமார் 2 லட்சம் நிதியை குன்றக்குடியில் நடைபெற்ற சர்வமதப் பிரார்த்தனைக் கூட்டத்தில் வழங்கினோம். ஆழிப்பேரலையில் மடிந்த இன்னுயிர்கள் அமைதிபெறவும்

உடைமைகளை உறவுகளை இழந்தோர்கள் துயரிலிருந்து மீளவும் பிரார்த்தனை நிகழ்த்தினோம். சர்வமதப் பிரார்த்தனையில் சர்வமதத் தலைவர்கள் மாவட்ட வருவாய் அலுவலர் பழனிச்சாமி, குன்றக்குடி கிராம மக்கள் மற்றும் பள்ளி மாணவர்கள் கலந்து கொண்டனர்.

கடற்கரையோர அழகிய கிராமங்கள் சுனாமி தாக்குதலால் போர்க்களக் காட்சியாக மாறி இருந்தன. கரையைத் தட்டிச் செல்லும் அலைகள் நமக்கு நினைவு படுத்தின. உலகத்தை உலுக்கி கோர தாண்டவம் ஆடிய அந்தப் பேரலைகள் ஒரு செய்தியை தந்து விட்டுச் சென்றிருந்தன.

கரைகளில் கோர தாண்டவம் ஆடிய பேரலைகள், வேளாங்கண்ணி தேவாலயத்தின் வாசலையும் தாக்கின. நாகூர் தர்க்காவையும் நோக்கி நகர்ந்தன. கன்னியாகுமரி கடற்கரையையும் விட்டு வைக்கவில்லை. ஆழிப் பேரலைகள் மனிதர்களைப் பார்த்து கொக்கரித்துக் கேட்கின்றன.

"மனிதர்களே! மனிதர்களே!
மரணத்திற்கு இந்து இல்லை!
மரணத்திற்கு இஸ்லாமியன் இல்லை!
மரணத்திற்கு கிறித்தவன் இல்லை.
மரணம் எப்படி சகலருக்கும் பொதுவானதோ
அதைப் போல வாழும் காலத்தில் பொதுமையாய் வாழ்ந்து காட்டுங்கள்" என்று தான் சொல்லிவிட்டுச் சென்றிருக்கின்றன.

"நம் வாழ்க்கை உலகிற்கு உரியது
நம் கடன் பணி செய்து கிடப்பதே!

என்ற மகாஉபதேசத்தை நமக்கு அளித்து விட்டு சென்றிருக்கின்றன. மகாசன்னிதானத்தின் தடம் மாறாத பாதையில் நம் பயணம் தொடர்கின்றது. மகாசன்னிதானம் விட்டுச்சென்ற பணிகளைத் தொய்வில்லாது தொடர்ந்து பணியாற்ற நம்மோடு தொடர்ந்து வருவோர் ஏராளம். அவர்களுக்கு

வார்த்தைகளால் அல்ல!
வாழும் வாழ்க்கையால் நன்றி சொல்வோம்!
நம் கடன் பணி செய்து கிடப்பதே!

என்றும் வேண்டும் இன்ப அன்பு

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## ஊர் நாயிற் கடையானேன்

சுதந்திரம் என்பது அடிமை நிலையிலிருந்து விடுதலை பெறுவது மட்டுமல்ல; தற்சார்பு நிலையில் வாழ்வதுமாகும்! இந்தச் சுதந்திரம் ஆன்மாக்களுக்கு, திருவருளைச் சார்ந்த வழிதான் கிடைக்கும். ஆன்மாக்கள் இறைவனுக்கு அடிமையாய் வாழ்வதில் சுதந்திரத்தை இழப்பதில்லை. ஏன்? இறைவன் குறியொன்றும் இல்லாதவன். ஆதலால், ஆன்மாக்களை அடிமைப்படுத்தமாட்டான். சீவன் மூத்த நிலையில் ஆன்மாக்களின் அடிமைப் பண்பு தன் விருப்பமேயாம்.

சுதந்திரம் இல்லாதன எல்லாம் சுதந்திரமான ஒன்றிற்கு உடையமையாக இருத்தல் இயல்பு. ஆன்மாக்களுக்குச் சுதந்திரம் இல்லை. ஆன்மாக்கள் ஆணவத்துடன் கூடி, ஆணவத்தின் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டு இருக்கும்பொழுது ஆணவத்தின் வழியிலேயே வாழும். அருட்சத்தியின் அருளால் தெய்வம் என்னும் சித்தம் உண்டாகி மடைமாற்றம் ஏற்பட்டு விருப்பு – வெறுப்புக்களிலிருந்து ஆன்மா விடுதலை பெறும். திருவருளைக் கண்ணனாகக் கொண்டு வாழும் இந்த நிலையில் ஆன்மா திருவருள் ஆட்டுவிக்கும் வழியிலேயே வாழும்; ஆடும்! இந்த உலகம் முழுதும், உயிர்கள் அனைத்தும் கடவுளுக்கே உரிமை உடையன. ஆதலால் இறைவனுக்கு ஆன்மாக்கள் உடைமைப் பொருள்கள்.

உடைமை என்பது ஒரு மந்திரச்சொல். மனிதர்கள் தன் உடைமைகளைக் காப்பதற்குப் போராடுகிறார்கள். ஆனால், பொது உடைமையைப் பேண யாரும் போராடுவதில்லை. ஏன்? பொது உடைமையை அழிக்காமல் இருந்தாலே பாராட்டலாம். பழங்காலத்தில் உடைமையைப் பொது நலத்திற்காகத் தியாகம் செய்தனர். வீட்டையே நாட்டிற்கு அர்ப்பணித்தார்கள். இப்பொழுது நாட்டையே வீட்டிற்குக் கொண்டுபோகிறார்கள். ஆதலால், உடைமை என்ற உரிமையில் இறைவன் ஆன்மாவை – மாணிக்கவாசகரைக் காக்கக் கடமைப்பட்டுள்ளான். "அப்படிக் காக்கத் தவறினால் உன்னை ஊர்ப் பிச்சன் என்று கூறி உன்னைச் சிரிப்பிப்பன்; பழி தூற்றுவன்" என்று

இறைவனை எச்சரிக்கிறார் மாணிக்கவாசகர். உடையவன் உடைமையைக் கவனிக்க வேண்டாமா? பேண வேண்டாமா? "இறைவன் உடைமையாளன்; ஆன்மா உடைமை" என்பது திருவாசகத்தின் திரண்ட கருத்து.

வீட்டுப் பிராணிகளில் நாய் ஒன்று. நாய் வளர்ப்பது இதயத்திற்கு இதத்தைத் தரும். நாய் அளவற்ற பரிவைக் காட்டும். வளர்ப்பவனைக் காணும் பொழுதெல்லாம் குழைந்து வாலாட்டும், சில உயரிய நாய்கள் வளர்ப்பவனின் சாவிலும் ஒன்றாகச் செல்லும்! இந்த இயல்புகள் நாய்க்கு இற்கையாய் அமைந்தவையல்ல; வளர்ப்பில் வருபவை! நாய் வளர்ப்பில் கவனம் தேவை! ஒருவர் கைப்பட வளர்க்க வேண்டும். பொதுவாக நாய்க்கு நன்றியுண்டு என்று கற்பிக்கப்படுகிறது! நாய் நன்றியுடையதாயிருத்தல் பொதுமைப் பண்பு அல்ல; சிறப்புப் பண்பேயாம். வளர்ப்பவனைப் பொறுத்தே இது அமைகிறது. நாய்களில் தாய் நாயும் குட்டி நாயும் குரைத்துச் சண்டையிட்டுக் கொள்வதைப் பார்த்தாலே தெரியுமே! ஏன்? சில நாள்களுக்கு வீட்டுப் பணியாள் நாய்க்குத் தீனி கொடுத்து அதை வயப்படுத்திக்கொண்டு கொலை, கொள்ளைகள் செய்துவிடுகின்றானே! அப்போது இந்த நாய் காவல் தொழிலை இழந்துவிடுகிறது; குரைப்பதும் கூட இல்லை. இந்தக் குற்றங் குறைகள் வளர்ப்பு நாய்க்கேயாம்! ஆனால், திருவாசகத்தில் நாய் நன்றியில் உயர்ந்தது என்றே பேசப்பெறுகிறது. "நாய்" முப்பது இடங்களுக்கு மேலாகப் பேசப்படுகிறது. இதில் பொதுவாக நாயின் சிறப்புக் கூறப்படுகிறது. மனிதன் நாயினும் கீழானவனாக இருக்கிறான். ஆம்! நாய் உணவளித்து உண்டு கொண்டு இருக்கும்பொழுது உணவளிப்பவனுக்கு எந்தத் தீங்கும் நினைப்பதில்லை; செய்வதில்லை! உணவளிப்பவன் உணவளிக்காமல் வேறு ஒருவர் உணவளித்தால் அவனுக்கும் நன்றிப் பெருக்குடையதாக இருக்கிறது. அவ்வளவுதான்! ஆனால், மனிதனோ உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்கிறான்; உண்டு கொண்டு இருக்கும் போதே கூடத் தீமை நினைக்கிறான்! நாய், தான் பெற்ற பேற்றை எண்ணிப் பார்ப்பதில்லை. நாய் – வளர்ப்பு நாய் வளர்ப்பவனின் அருமை உணர்வதில்லை. "நாய் பெற்ற தெங்கம்பழ"த்திற்கு "ஏது பயன்?" அதுபோல் மனிதரில் பலர் இறைவனின் அருமையை உணர்வதில்லை. இறைவனின் அருட்கொடையால் எத்தனை எத்தனை கோடி இன்பங்கள் இந்த உலகில் உள்ளன! இவற்றை உணர்வார் யார்? இவற்றினைத் தந்தருளிய கடவுளை நினைப்பார் யார்?

நாயில் ஊர் நாய் ஒருவகை! அதாவது வளர்ப்பார் இல்லாத நாய்! அது சுதந்திரமாய்த் திரியும். காலையில் அம்மம்ம, எவ்வளவு சுறுசுறுப்பு! எழுந்து ஊர் சுற்றும்! தன்னை ஒத்த ஊர் நாய்கள் நிற்கும் இடங்களில் நிற்கும்! விளையாடும்! சண்டைபோடும்! குடும்பம் நடத்தும்! எச்சில் இலைகளைத் தேடி ஓடும்! ஆங்கும் ஒரு யுத்தம்! படுகளம்! கிடைக்கும் எலும்பைக் கடிக்கும்! செங்குருதி சொட்டச் சொட்ட ஒதுங்கிப் போய் இருக்கும்! மீண்டும் எழுந்து எலும்பினைக் கடிக்கும்! உடம்பு முழுதும் வங்கு பிடித்து இருக்கும்! போதாக் குறைக்குச் சொறியும் உண்டு! இவையே ஊர் நாயின் இலக்கணம்! இந்த ஊர் நாயை உவமிக்கின்றார் மாணிக்கவாசகர்! ஆம்! கூர்ந்து நோக்கின் பல மனிதர்கள் ஊர் நாய்கள்தாம்! இல்லை, இல்லை! ஊர் நாயினும் கடையர்கள். கடவுளின் ஆணை வழி திரோதான சக்தியால் வளர்க்கப்பெறாத மனிதன் – வளராத மனிதன் ஊர் நாய்! இல்லை, இல்லை! ஊர் நாயைவிட மோசமானவன்! ஆம்! இவனும் எழுந்திருக்கிறான்; ஊர் சுற்றுகிறான். மூலைக்கு மூலை நின்றுவம்பு வளர்க்கின்றான்! வம்பு வழக்குகளைத் தூண்டி விடுகிறான்; கிடைத்த இடத்தில் தின்கிறான்; இரந்து திரிகின்றான். பல இடங்களில் குடும்பம் நடத்துகிறான். இவனுடைய உடல், நோய்களின் கொள்கலன். இப்படியும் மனிதர்கள் இன்று வாழவில்லையா? இவர்களைச் சொன்னால் உடம்பெல்லாம் பற்றி எரியும் என்பதால் மாணிக்கவாசகர் தம்மீது பழி சுமத்திக்கொள்கிறார்.

ஊர் நாயிற் கடையனானேன் என்கிறார். இந்த ஊர் நாய்கள் தரங்கெட்டுப் போனதோடு அல்லாமல் வளர்ப்பு நாய்களையும் கவர்ச்சித்து கெடுக்கும்! வளர்ச்சியில் முதிர்ச்சி பெறாத வளர்ப்பு நாய்கள் பல விதிமுறைகள், கட்டுப்பாடுகள், தண்டனைகளுக்கு அஞ்சி வளர்ப்பிலிருந்து வழுவி ஊர் நாய்க் கூட்டத்தில் போய்ச் சேர்ந்துவிடுவது உண்டு. ஐயோ பாவம்! விதிவழியே நடத்தல் பாதுகாப்பு! விதிமுறைகளின்படி வாழ்தல், பழக்கப்பட்டவர்களுக்கு எளிது! பாதுகாப்பும் கூட! விதிமுறைகளே தவறுகளிலிருந்தும் பாதுகாப்பளிக்கும். அயர்ந்தறியாது செய்யும் தவறுகளுக்குக் கண்டித்தலும் தண்டனைகளும் பெறுவது மருத்துவமேயாகும். "புளியம் வளாரினால் மோதுவிப்பாய் பின்னை உகப்பாய்!" என்று அப்பரடிகள் கூறுவார்.

தெரிந்தும் தெரியாமலும் அயர்ந்தும் சோர்ந்தும் செய்யும் மனிதரின் பிழைகளைப் பொறுத்தாற்றாது தேவசிகாமணி குருதேவர் சுடுவது அவரையல்ல; தவறு செய்பவர்களின் பாசத்தினையே குற்றங்களையே என்று கூறுவர். ஆதலால் வளர்ப்பு நாய் வளர்ந்து

வாழ்ந்து பேறடைய முயல்வதே சிறப்பு! ஊர் நாய்க் கூட்டத்தில் போய்ச் சேரக்கூடாது.

வளர்ப்பின் இலக்கணம் என்ன? அடையாளம் என்ன? வளர்ப்பில் கல்வி இருக்கும்! கலைஞானம் இருக்கும்! கல்வியும் கலைஞானமும் வாழ்க்கையை வளர்ப்பனவாம்! வாழ் நிலையில் உயிர் நிலையாகிய அன்பு, கலைஞானத்தின் பயனேயாம். அதனால்தான் சிவகோசரியாருக்குக் கிட்டாத "கலைமலிந்த சீர் நம்பி" என்ற சிறப்பு, கண்ணப்பருக்குக் கிடைத்தது. மனம் இயல்பாக நல்லதும் அல்ல கெட்டதுவும் அல்ல. நல்லது செய்வதும் அல்ல. ஓயாது ஒழியாது சலித்துக்கொண்டே இருக்கும். அதாவது இயக்க நிலையில் இருக்கும். இந்த இயக்கத்தைப் பயன்படுத்திக்கொண்டு எவ்வழியில் இயக்கினாலும் – அவ்வழியில் ஆன்மா இயங்கும். ஆன்மாவின் இயல்பு சார்ந்த தன் வண்ணம் ஆதல். ஆன்மாவைச் சார்பு இயக்கினால் ஊர் நாயைப் போல் இயங்கும். திருவருட் சார்பு இயக்கினால் வளர்ப்பு நாய்போல் இயங்கும். உண்மையில் ஆன்மாவை இயக்குவது சார்புநிலை; சுற்றுப்புறச் சூழ்நிலை. அதனால்தானே "மனம் போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்றார் ஔவை மூதாட்டி. மனத்தைப் பக்குவப்படுத்துவது கல்வியும் கலை ஞானமுமாம்! ஈசன் கூட கல்லார் நெஞ்சில் நில்லான்! கல்லா மனத்தராக இருப்பவர்களே, ஊர் நாய்போல வாழ்வார்கள்.

கல்வியும் கலைஞானமும் இல்லாதாருக்கு உடம்பின் அருமை தெரியாது. அதனால் உடம்பினைப் பேணவும்மாட்டார்கள்! உடம்பினை வளர்க்கவும் மாட்டார்கள்! அவர்களுடைய உடம்பு புழுக்கூடாகத்தான் விளங்கும். முடைநாற்றம் வீசும் புழுக்கூடாகத்தான் விளங்கும். ஐயகோ, இந்த உடல் அற்புதமான உடல்! ஞான விளக்கெரிய வேண்டிய உடல்! இறைவன் எழுந்தருளும் விமானமாக விளங்கவேண்டியது இந்தப் பொன்னுடல்! இறைவன் விரும்பி எழுந்தருளும் திருக்கோயில் இந்த உடம்புதான்! ஆயினும் என்? அருமைகள், அறிவோருக்குத் தானே! உடம்பு, இறைவன் எழுந்தருளும் திருக்கோயிலானால் விடுதலை உண்டு! இந்த நிலையில் உடல், உயிரைக் காக்கும்! ஆனால் உடம்பை இகழ்ந்து புழுக் கூடாக்கினால் உடம்பு காவல் தகுதியை இழக்கும், உடம்பைக் காத்துக் கிடக்கும் பணி வேறு வரும்.

கல்வியும் கலைஞானமும் தேடாது இறைவன் திருவருட் சிந்தனை வழி வளர்ப்பாக வாழக் கற்றுக்கொள்ளாது போனால் மானிட வாழ்வு வறிதே பாழாகும். திருவுடல், ஊனுடலாக, புழுக்குரம்பையாக மாறி,

மனிதன் சுமந்து காத்து நிற்க வேண்டிய பொருளாகும்! இதனால் பிறவியும் நீங்காது! செத்துப் பிறக்கும் தொழிலுக்கு ஆட்பட்டு இங்கேயே ஊனுடலைக் காத்துக்கிடக்க வேண்டிய பரிதாப நிலை ஏற்படும்! ஊர் நாய் வாழ்க்கையை வெறுத்திடுக! வளர்ப்பு நாய் வாழ்க்கையை ஏற்றிடுக!

வளர்ப்பிலும் பின்பற்றுதலிலும் தொடர்ச்சி தேவை. இடையீடு வந்ததோ, தொலைந்தது! ஆணவம் விழிப்புடன் இருக்கும்! திருவருள் வழிச் செல்வதில் அயர்வு – சோர்வு தலைப்பட்டால் மீண்டும் ஆணவச் சார்பு பற்றிக் கொள்ளும்! உயிர்களுக்கு ஆணவச் சார்பு – அநாதிச் சார்பு, இயற்கையாக அமைந்தது. அது தேடாமலே வந்தமையும், உயிர்களுக்குத் திருவருட் சார்பு பிறவிச் சார்பேயாம். இது வலியவந்து உயிர்களைப் பற்றாது. மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கி ஓடும் புனல் போன்றது ஆணவச் சார்பு. பள்ளத்திலிருந்து மேட்டினை நோக்கித் தண்ணீரை ஏற்றுவது போன்றது திருவருட்சார்பு. ஆதலால், ஞானப்பயிற்சியில் – திருவருட் சார்பில் கவனம் தேவை. இதனைத்தான் ஞானிகள் "விழித்திரு" என்றனர். ஆன்மாவின் விழிப்புணர்வே ஆணவச் சார்பை மட்டுப்படுத்தும்; திருவருட் சார்பைக் கூட்டுவிக்கும். திருவருட் சார்புடையவர்கள் எத்தொழில் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் இறைவன் திருவருளையே பற்றுக்கோடாகக் கொள்வார்கள். கை வீசி நடக்கும் மோர்க்காரிக்குக் கவனம் முழுவதும் மோர்ப்பானையில் இருப்பதைப் போல திருவருட் சார்புடையவர்கள் எந்தப் பணியை மேற்கொண்டாலும் – செய்தாலும் திருவருள் நினைப்பாக இருப்பார்கள். நின்றும் இருந்தும் கிடந்தும் தொழுவார்கள். தொழும்பாய்த் தொண்டு செய்வார்கள், இந்த நிலையை எண்ணி, அழும் கல்வியைத் தேடுக! கசிந்துருகி அழக் கற்றுக்கொள்க! இந்த நிலையில் இறைவனுக்கு உடைமையாகலாம். இறைவனுக்கு உடைமையாம் நிலை எய்திவிட்டால் அவன் காப்பான்! பெருங்காதல் மூளும்! ஊனும் உயிரும் உருக வாழலாம்! இன்ப அன்பினை எய்தலாம்! யாதுமோர் குறைவில்லை!

உடையானே நின்றனை உள்கி
உள்ளம் உருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதம்
சேரக் கண்டு இங்கு ஊர் நாயின்
கடையா னேன்;' நெஞ் சுருகாதேன்;
கல்லா மனத்தேன்; கசியாதேன்;
முடையார் புழுக்கூடு இது காத்திங்கு
இருப்ப தாக முடித்தாயே! - (திருச்சதகம் -60)

(தொடரும்)

# உலக மெய்யியலும் திருக்குறள் மெய்யியலும் - தொடர்

## 26. தமிழர் மெய்யியல் - திருக்குறள் மெய்யியல்

(தமிழாகரர்.சித்தாந்த நன்மணி. முனைவர். கா. அரங்கசாமி)

### முன்னுரை :

திருக்குறள் உலக அறிஞர் பெருமக்களின் போற்றுதலுக்குட்பட்டது. செர்மன் நாட்டு அறிஞர் ஆல்பர்ட் சுவைட்சர் இதனைப் போற்றுவதன் காரணம் திருக்குறளின் உலகப் பார்வையே என்பதை நாம் மறத்தல் கூடாது. பிற மேலை நாட்டு அறிஞர்கள் யாவரும் அதன் உலகப் பார்வையைப் போற்றிடக் காணலாம். அவ்வாறே பாரிசு அருங்காட்சியகத்தில் உள்ள எபிரேய மொழி ஆவணம் திருக்குறளின் மாட்சிக்கு அதன் உலகப் பார்வையே என்று கூறுவதையும் நாம் எண்ணுதல் வேண்டும். திருக்குறள் உலக மக்கட்காக எழுதப்பட்டது. இங்குத் திருக்குறளின் உலகப் பார்வையை அறிய முற்பட்டுள்ளது இக்கட்டுரை. அதனை ஆய்வதால் திருக்குறள் உலகின் தலைசிறந்த மெய்யியல் நூல் என்பதை அறியமுடியும். திருக்குறள் தோன்றியதன் நோக்கமே உலகத்தை அறிவியல் மெய்யியல் ஆளவேண்டும் என்பதை நாம் அறிதல் வேண்டும் என்பதற்காகவேதான்.

### திருக்குறளில் உலகு

திருக்குறளில் உலகு என்ற சொல்லும் ஞாலம் என்ற சொல்லும் வரும் குறட்பாக்களைத் தொகுத்துக் காணின் அதன் உலகப் பார்வை தெளிவாகும். திருக்குறள் கூறும் செய்திகள் யாவும் உலகப் பார்வை கொண்டவையே என்றாலும் உலகு, ஞாலம் என்ற சொற்கள் திருக்குறளில் 38 இடங்களில் வருவதை நாம் உணர்தல் வேண்டும். அந்த எண்கள் 1, 20, 27, 58, 68, 140, 211, 215, 243, 250, 280, 290, 294, 336, 346, 387, 389, 397, 399, 425, 426, 470, 484, 485, 520, 533, 542, 571, 572, 578, 598, 612, 637, 670, 999, 1015, 1016, 1025, 1032 என்பனவாகும். இவற்றில் பின்னர் சிலவற்றை விளக்குவோம்.

**திருக்குறளில் அதிகாரத் தலைப்புக்கள் போற்றும் உலகியல் பார்வை**

அறத்துப்பாலில் வரும் அதிகாரங்கள் யாவும் உலகியல் பார்வை கொண்டன என்பதை யாவரும் அறிவர். காட்டாக, அறன் வலியுறுத்தல், அன்புடைமை, இனியவை கூறல், செய்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, ஒப்புரவறிதல் போன்ற அதிகாரங்களின் தலைப்புக்களையும் குறட்பாக்களையும் சிறப்பாகக் காண்க. அவ்வாறே பொருட்பாலின் அனைத்து அதிகாரங்களும் உலகப் பார்வை கொண்டன எனினும் சில அதிகாரங்கள் சிறப்பாகக் குறித்திடத்தக்கவை. அவையாவன அறிவுடைமை, கல்வி, கேள்வி போன்றவையுடன் சிலர் நினைக்கும் குறளின் வளமற்றவை என்னும் அதிகாரங்களான, இகல், பகைத்திறம் தெரிதல், நல்குரவு, நட்பு போன்ற அதிகாரங்களும் சிந்திக்கச் சிந்திக்க உலகப்பார்வை கொண்டன என்பதை உணரலாம். அவ்வாறே காமத்துப்பாலில் வரும் அதிகாரங்கள் யாவும் சுட்டி ஒருவர் பெயர் கூறப்படாமையால், உலகியல் பொதுமையால் உலகியல் பார்வை கொண்டன என்பதை அறியலாம். மேலும் காமத்துப்பாலில் வரும் சில குறட்பாக்கள் (காட்டாக, தம்மில் இருந்து, மலரினும் மெல்லிது எனத் தொடங்கும் குறட்பாக்கள் சமூகப்பார்வையும் உழைப்பின் உயர்வும், மனப்பக்குவமும் பற்றிக் கூறுவன). மெய்யியல் பார்வை கொண்டு உலகியல் கூறும் திறத்தையும் நாம் அறியலாம்.

**திருக்குறளில் அறிவர் நெறி**

திருக்குறள் காட்டும் அறிவர் நெறி பற்றி முன்னர்ப்பல கட்டுரைகளில் கூறியுள்ளோம். அறிவர் நெறியைப் பட்டியல் இட்டுப் பார்க்க அதுபின்வருமாறு அமையும் என்பதையும் நாம் காணின் திருக்குறளின் உலகப் பார்வை விளக்கம் பெறும்.

1. பகுத்தறிவுப் பார்வை
2. உலகியல் நோக்கம்
3. வாழ்க்கை வாழ்வதற்கே
4. வாழ்க்கை தெய்வநிலை அடைவதற்கே
5. இந்த உலகம் இன்பம் பெறுவதற்குரியது.

6. மறுமை இன்பமும் பெறுவதற்குரியது
7. ஒழுக்கம் மிக்க பண்பட்ட வாழ்க்கை
8. அறம்திறம்பாத வாழ்க்கை
9. மக்கட்குப் பயன்படும் வாழ்க்கை (சமூக வாழ்க்கை)
10. உலகு போற்றும் அறிவியல் பார்வை

மேற்கூறிய பத்துத் தலைப்புக்களும் திருக்குறளின் உலகியல் - பார்வையை அறிவர் நெறி நின்று தெளிவாகக் காட்டும்.

**உலகப் பார்வையில் மூன்று குறட்பாக்கள் :**

உலகப் பார்வையைத் திருக்குறள் தருகின்றது என்பதற்கு மூன்று குறட்பாக்கள் போதும். அவையாவன.

1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
   பகவன் முதற்றே உலகு (1)
2. உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
   கூம்பலும் இல்லது அறிவு (425)
3. யாதானும் நாடாமால் ஊராமால் என்?ஒருவன்
   சாந்துணையும் கல்லாத வாறு (397)

என்னும் குறட்பாக்களே அவை. இந்த மூன்றும் திருக்குறளின் உலகப் பார்வையைக் காட்டும் என்பதை யாவரும் அறிந்து போற்றுவர். எனவே மூல முதலான ஒன்று (இயற்கை) உலகத்தின் முதல் என்பதும் உலகத்தை தழுவிக் கொள்வதே அறிவு என்பதும் - எந்த நாடும் நம்நாடே கல்வி கற்றவர்க்கு என்பதும் உலகப்பார்வை கொண்டவை என்பது யாவர்க்கும் உடன்பாடு ஆனதாகும். இதனால், உலகு, ஞாலம் பற்றித் திருவள்ளுவர் 38 குறட்பாக்களில் கூறினாலும் மேற்காட்டிய மூன்று குறட்பாக்கள் தெளிவாகக் குறட்பாக்களின் உலகப்பார்வை காட்டும். மேலும் திருக்குறளின் முப்பால் நுட்பமே. உலகப் பார்வைதான் என்பதை நாம் ஏற்கெனவே குறித்ததைச் சுட்டிக்காட்ட விழைகின்றேன்.

**முடிவுரை :**

இவ்வாறு குறட்பாக்களின் மெய்யியல் அறவியல் பார்வை யாவும் உலகப் பார்வை கொண்டவை என்பதை உலகத்து அறிஞர்கள் கூறினும் இங்குத் தக்க சான்றுகள் வழி அதனை மெய்ப்பித்துள்ளோம். திருக்குறளின் சிறப்பே அதன் உலகளாவிய பொதுமை அறம் போற்றியும்,

மெய்யியல் போற்றியும் செல்வது என்பதைக் காமத்துப்பாலில் உள்ள ஒரு குறள் காட்டும். அந்தக் குறளை ஏற்கனவே மேற்கோளாகக் காட்டியிருந்தோம். விளக்கத்திற்காக மீண்டும் கூறுவோம். அக்குறள் வருமாறு,

"தம்மில் இருந்து தமது பாத்து உண்டு அற்றால்
அம்மா அரிவை முயக்கு" (1107)

இக்குறளின் வழித் திருவள்ளுவர் தனிமனிதன் இன்பம் சமூகத்தின் இன்பமாகக் காட்டப்படுவதுடன் உழைப்பின் உயர்வும் காட்டப்படக் காண்க. மேலும் திருக்குறள் காமத்துப்பால் வெற்று உடற்காமம் பற்றியது என்பதைப் பொய்யாக்கும் இக்குறட்பாவை நாம் உற்று நோக்குதல் வேண்டும். மேலும் காமத்துப்பாலில் அவர்கூறும்

"மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படுவார்" (1289)

என்ற குறளைக் காண்க. இதனைக் காணும்போது அதன் மெய்யியல் சாயல் தெற்றென விளங்கும். இன்றைய உலகில் போலிகள் நிறைந்துள்ளதைப் படம் பிடிக்கும் இக்குறள் உலகத்தரம் வாய்ந்த பெண்மைக்கும் ஆண்மைக்கும் இலக்கணம் கூறக் காண்க. இவ்வாறு திருக்குறள் முப்பால் நுட்பம் அறியின் அதன் உலகியல் பார்வையும் மெய்யியல் அறவியல் சார்பும் நாம் அறிந்து மகிழ்ந்து போற்றலாம்.

---


## மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

### சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

நிர்வாகி, மக்கள் சிந்தனை, குன்றக்குடி - 630 206

சிவகங்கை மாவட்டம், தொலைபேசி எண் : 04577 - 264227

ஆசிரியர் : மரு. பரமகுரு

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி

பாடலின் பிற்பகுதிக் கருத்து; எல்லாப் பொருள்களிலும் கலந்தும் அவற்றிற்கு மேலாகவும் விஞ்சி உள்ளவனே! மயக்க உணர்வே இல்லாத பெருஞான வடிவமான உன் தந்தை சிவபெருமான், பிள்ளைப் பாசத்தால் உன்னிடம் விளையாட்டாகப் பிரணவ உபதேசம் கேட்க வந்தபோது உபதேசித்தவனே! பக்தர்களின் மனமாகிய கோட்டையை விட்டு நீங்காமல் நிலைத்து நிற்பவனே! எட்டு என்பதைக் குறிக்கும் அகரத்தின் விளக்கத்தால் முத்திக்கு வழிகாட்டிய முத்தனே! அழியா வரம்பெற்ற சூரபதுமன் குலத்தை வேரோடு சாய்த்த வீரவேல் உடையவனே! மாமரத்தை (மாமரமாகி நின்ற சூரனை) மயிலும் சேவலுமாக அழகுபடுத்திய தச்சனே! வள்ளி மணவாளனே! நாற்றிசை உலகில் சிறந்த தச்சூர் என்னும் ஊரின் வடக்கமர்ந்த முருகனே! மேற்சொன்ன மகளிர் மயக்கத்திற்கு ஆளாகாமல் காப்பாற்றுவாயாக!

பாடலின் அரும்பத உரை : மைப்பாகு எனக்கூறி – கரிய வெல்லம்போல் இனிப்பாகப் பேசி. எச்சாய் – உயர்வாய். பிச்சு ஆசருக்கு – அடியவரிடம் பித்துக் கொண்ட சிவனுக்கு. கோட்டைக்கு இலங்க – பக்தர்தம் மனமாகிய கோட்டைக்கேற்பத் தங்கும். எட்டாம் எழுத்து – தமிழ் நெடுங் கணக்கில் எட்டு என்ற எண் "அ" என்பதாகச் சுட்டப்படும். அகரம் என்பது உயிர்த் தோற்றத்தின் உண்மையை உணர்த்தி உய்விக்கச் செய்யும் நுட்பம் வாய்ந்த எழுத்து, எக்காலும் மக்காத – எப்போதும் அழிவில்லாத, குறப்பாவை தாட்குட்படிந்து – வள்ளி நாயகியின் தாள்களை வணங்கி (தாட்கு உட்படிந்து) சக்காகி – வள்ளிக்குக் கண்போன்றவனாகி (சக்கு – கண்). பூர்வம் – கிழக்கு. உத்தரம் – வடக்கு.

மேற்படியான பாடலில் அருணகிரிநாதர் குறிப்பிடும் தச்சூர் என்பது எது என்பதை முதலில் உணரவேண்டும். ஏனெனில் தச்சூர் என்ற பெயருடைய ஊர்கள் பல உள்ளன என்பதால் இப்பாடல் எந்தத் தச்சூரைக் குறிக்கிறது என அறிவது கடமையாகிறது.

ஆரணி, கள்ளக்குறிச்சி, திட்டக்குடி மற்றும் புதுக்கோட்டை போன்ற நகரப்பகுதியில் தச்சூர்கள் உள்ளன. இந்தத் தச்சூர்க்கு வடக்கு மார்க்கமாக முருகனின் கோயில்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

ஆனால் பொன்னேரியின் அருகே உள்ள தச்சூர்க்கு வடமார்க்கத்தில் (வழியில்) ஆண்டார்குப்பம் என்ற ஊரில் முருகன் கோயில் இருந்தாலும் "தச்சூர்" என்ற சொற்பொருள் நுட்பத்தின்படி

நெசவுத் தொழில் ஆண்டார் குப்பத்தில் நடைபெறாததால் நெசவுத் தொழிலை உணர்த்தும் "தச்சூர்" என்ற சொற்பொருளுக்கேற்ப இவ்வூரானது விழுப்புரத்திற்கு வடமேற்கே 10.கி.மீ. தூரத்தில் உள்ள தச்சூரைக் குறிப்பதாகும் என்பது நெசவுத் தொழிலால் சிறப்படைந்துள்ள காரணத்தால் உறுதியாக நம்பலாம்.

இத்திருப்புகழில் முருகனை அருணகிரியார் "தச்சா!" எனக் கூறுவது புதிய சொல்லாட்சியாலான போற்றுதலாகும். அழியா வரம் பெற்ற சூரபதுமன் முருகனோடு போர்புரியுங்கால் இறுதியில் கடலில் மறைந்து மாமரமாகி நின்றான். அவனின் மாயாசாலத்தை உணர்ந்த முருகன் தனது சக்திவேலை ஏவி மாமரத்தைப் பிளந்தார். மாமரம் வேலாயுதத்தால் இருகூறானாது. ஒரு கூறு மயிலும் மறுகூறு சேவலுமானது.

மரத்தச்சர்கள் மரத்தை அறுத்து, செப்பமாக்கி அழகிய மரச்சிற்பம் செய்வது போல ஈண்டு முருகன் மாமரமான சூரனை மயிலும் சேவலுமான அழகிய ஆன்மீகச் சிற்பமாக்கினான்.

தச்சர்கள் மரச்சிற்பம் செய்வதன் முன், மரத்தைச் சோதித்துப் பார்ப்பர். உலுத்தும் மக்கியும் போகாத மரமா? என அறிந்த பின்னரே சிற்பம் வடிப்பர். அதுபோல அழியா வரம் பெற்ற சூரன் என்பதை அருணகிரியார் "எக்காலும் மக்காத சூர்" என்கிறார். வரம்பிலா (அழிவில்லாத) வரம் பெற்றாலும் உண்மையில் அவன் சேவலும் மயிலுமாய் என்றும் முருகனோடே இருப்பதால் எக்காலும் மக்காத மாமரமானான் சூரன் என்ற கற்பனைக்கு ஈடு இணையில்லை என்றே கூறலாம். இஃது இலக்கிய அலங்காரத்தோடு கூறப்பட்டதன்று. ஆன்மாவுக்கான ஆன்மீக அலங்காரமாகக் கூறப்பட்டது.

மரவேலையின் நுட்பத்தை ஔவையார் புறநானூற்றில் (87) "வைகல் எண் தேர் செய்யும் தச்சன், திங்கள் வலித்த காலன்னோனே" என்று ஒருவீரனைப் புகழ்கையில் கூறுகிறார். ஒரு நாளைக்கு எட்டு தேர் செய்யும் ஆற்றல்சால் தச்சன், ஒரு மாதத்திற்குத் தேரின் ஒரு சக்கரத்தை நேர்த்தியாகச் செய்யும் திறனும் உடையவனாம் என்கிறார் ஔவைப்பிராட்டி. இதைக் கொண்டு தான் தொழில்நுட்பம் என்பர். முருகன் சூரனைக் கொண்டு சமய ஆற்றலால் சித்தாந்த உண்மையை உலகிற்கு உணர்த்தினான் என்பதே அவனைத் தச்சனாகப் பாவிக்கச்

செய்தது எனலாம். ஆக முருகன் அசுரத் தச்சன் ஆவான். ஏனெனில் நுட்பமான தொழில்திறன் உடையோரை அசுரத்தமானவர் என்பதுபோல அசுர வேலைப்பாட்டைச் செய்தவன் என்பதால் அப்பெயர் பொருந்தும். அவனது ஞானவேல்தான் அந்நேர்த்தியைச் செய்ததால் அவனை ஞானத்தச்சன் என்றாலும் தகும்.

மரத்தை அறுத்து கூறாக்கி, செப்பப்படுத்தி சிறுசிறு பாகங்களை ஒன்றோடொன்றாகத் தைப்பதினாலே "தச்சன்" எனக் காரணப் பெயராகவும் கூறலாம். செட்டிநாட்டில் நாற்காலிக்குக் கோக்காலி என்று பெயர், கோர்க்கப்படுவதால் அமைந்த பெயர். அது போல மாமரத்தை நேர்த்தியான சேவலும் மயிலுமாக ஆக்கிவிட்டதோடு முருகன் வாளா இருந்துவிடவில்லை. அவைகளைத் தன் உடைமைப் பொருளாக கோர்த்துக் கொண்டதால் மாமரத்தச்சன் என்பதற்கும் மேலாக ஞானமாத் தச்சன் என்றால் அது முருகனுக்கு முற்றிலும் பொருந்தும்! என்னே அருணகிரிநாதர் "தச்சா" என முருகனை விளித்த சுந்தரம்!

இந்தத் தச்சு வேலையை முருகன் ஒருசித்து விளையாட்டாகச் செய்ததினால் அவன் "சித்தா" எனப்பட்டான். இப்படிச் சித்தத்தால் செய்த தச்சுத் தொழிற்கேற்ப அவன் வாழும் ஊர்ப்பகுதி தச்சூர் எனப்பட்டது.

மரவேலையைத் தச்சு வேலை என்பதற்கேற்ப மரத்திலிருந்து தறிக்கப்பட்டது தறி என்ற சொல்லடிப்படையில் தறித்தொழின் மாண்புடைய ஊர் தச்சூர் ஆனதில் வியப்பில்லைதானே! இத்தறித் தொழில் சிறப்பான வாழ்வு, தமிழகத்தின் பிற தச்சூர்களுக்கு இல்லாததால் விழுப்புரத்தை ஒட்டிய ஊரே தச்சூராம் எனலாம்.

இத்தறித்தொழில் காலப்போக்கில் சிறுகச் சிறுக வளர்ந்து விரிவடைந்ததால் ஊரின் பெருக்கம் பெரிய தச்சூர், சின்ன தச்சூர் என்ற பிரிவில் இன்றும் இவ்விரு தச்சூரும் உள்ளதால் அருணகிரிநாதரின் "தச்சூர், தச்சா" என்ற சொல்லாட்சித் திறனை என்னென்பது? அருணகிரி வாக்கே வாக்கு என்பதால்தான் "வாக்கிற்கு அருணகிரி" எனப்பட்டார் போலும் என்க!

———

# "அப்பர் விருந்து" - நூலில் திலகவதியார் தரும் தமிழின்பம்

(தருமையாதீனப் புலவர்.வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் முன்னை நாளில் பணியாற்றியவர்களில் ரா.பி. சேதுப்பிள்ளை, கா. சுப்பிரமணியபிள்ளை, கோ. சுப்பிரமணிய பிள்ளை, தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலியோர் வழக்கறிஞர் பட்டம் பெற்று, தமிழ்த் துறையில் பயணித்து வெற்றி பெற்றவர்கள். அவர்கள் "ஆய்ந்து எழுதிய நூல்கள்" தமிழின்பமும், வரலாற்று மெய்மையும் பெற்ற கட்டமைப்புடையவை. அவற்றில் பல நூல்கள் கல்லூரிகளில், பாடநூல்களாக வைக்கப்பெற்றன. ரா.பி. சேதுப்பிள்ளை, கோ. சுப்பிரமணியபிள்ளை நூல்களில் எதுகைமோனைகள் உலாவரும். "தமிழ்விருந்து" படைத்த அவர்கள் இருவரும் மறைந்த பின்பும் அவர்கள் வழங்கிய நூல்கள் மறையாமல் புகழை நிலைநாட்டிவருகின்றன. கோ. சுப்பிரமணியபிள்ளையின் தமிழ்நூல் ஒன்று அப்பர் விருந்து. அந்நூலில் அப்பெரியார் "திலகவதியார்" பற்றி எழுதிய வரலாற்றில், எதுகை மோனைகள் திகழ்ந்து விளங்குவதை வாசகர்கள் படித்து மகிழ அப்படியே தரப்படுகிறது.

பெற்றோரை இழந்து உற்றாரும் இன்றி உலப்பெய்திய அக்காளுக்கும் தம்பிக்கும், கலியினைச் செற்றோரேயன்றி மற்றாரும் துணையில்லாதிருந்தது. புதுமாப்பிள்ளைதான் புத்துயிர் அளிப்பார் என்று புகன்று நின்றனர். மணவாளன் வந்து மணக்கச் செய்வார் என்று மனப்பால் குடித்தனர். கைகொடுத்து உதவும் "கலிப்பகை"யாரையே கனவு கண்டனர். மணவாளன் வரவினை, மறவாமல் நாளும் மனம் உவந்து ஆவலுடன் எதிர்நோக்கினர். போரில் வெஞ்சமம் விளைத்து, எஞ்சலில்புகழொடு பகையை முருக்கி, வீரம் காட்டினார் கலிப்பகையார். அவர் உடல் மண்ணிலே விழுந்தது; உயிர் விண்ணிலே எழுந்தது. கலிப்பகையார் வீரத்துறக்கம் விழுமிதின் எய்தினார்.

தமருலகம் தளர்வெய்தச் சமருலகம் புக்கவர் அமருலகமேயாளத் தக்கவரானார். மணமகனாகப் போனவர்

பிணமகன் ஆனார் என்பது எவ்வளவு கொடிய செய்தி. இதுவே நாட்டில் எங்கும் பெரும்பேச்சாகிப் பெருவார்த்தையாகப் பிறந்துவிட்டது.

**வெட்டிடும் புண்ணில் சுட்டிடும் தீயிட்டுக் கட்டிடுமதுபோல் அக்கெட்டிடும் செய்தி கிட்டிவரலும், தட்டழிவெய்தித் தளர்ந்தார் திலகவதியார். கள்ளங்கபடமற்ற இவர் பிள்ளை உள்ளம், கொள்ளியிற்பட்ட எறும்புபோல் துடித்தது. அவருடைய நிலை என்ன?**

மணமாகாத கன்னிப்பெண். பன்னீராட்டைப் பருவம். திருவளர் தாமரைமேல் உருவளர் திருமகள்போல் விளங்கினர், திலகவதியார். அப்பொழுது, மாப்பிள்ளை கலிப்பகையாருக்காகத் திருமணப் பேச்சு நடந்தது. மாப்பிள்ளையோ அடலேறு போன்ற போர்வீரர். கண்ணிறைந்த கட்டழகு வாய்ந்தவர். கோதில் சீர்ப்புகழானாரும் குணம்பேசிக் குலம் பேசிக் குணவதியாம், திலகவதியாரை அவருக்கேமனம் நேர்ந்தார். ஆதலால் கலிப்பகையாரையே தம் கணவராகக் கருதிவிட்டார் திலகவதியார். திருமணம் இன்னும் நடக்கவில்லைதான். ஆனால் பெற்றோர்கள் மனம் இணங்கி நிச்சயமாகிவிட்டபடியால், திலகவதியார் தம்மைக் கலிப்பகையாரின் உடைமைப் பொருளாகவே மதித்துவிட்டார். அம்மையாரின் பிஞ்சு மனதிலே கலிப்பகையுருவம் நிலைப்பெய்திவிட்டது. இதுவே அக்காலத் தமிழ்ப்பெண்களின் சிறப்பு இயல்பு.

திலகவதியாரின் பெற்றோர்கள் ஒருமணவாளனைக் குறித்து நிச்சயித்தார்கள். அதன்படி நிறைவேற்றிக் கொடுக்கத் தாய்தந்தையர் இருக்கவில்லை. மாண்டுபோயினர். மணவாளனாவது வந்து மணந்து கொள்வான் என்றால் அவனும் மாண்டு போயினன். கண்ணுக்கும் புலப்படாமல் கைக்கும் அகப்படாமல் அந்தரம் புகுந்துவிட்டான். நிச்சயித்தபடி நிறைவேற்றி வைப்பதற்கு மணப்பெண் ஒருவர்தான் எஞ்சி நின்றார். பின் அவராவது அதனை நிறைவேற்றிவைக்க வேண்டாமா? ஆம்! அவர் அதனைக் குறைவற நிறைவேற்றிவைக்கத் துணிந்தார். எவ்வாறு?

கலிப்பகையின் உடல்தான் மறைந்தது. அவர் உயிர் விண்ணிலே தனித்து நின்றது. தன் உயிரை அங்கே கொண்டு சென்று அவ்வுயிரோடு இசைவித்து ஒன்றிவாழ ஒருப்பட்டு எழுந்தார் திலகவதியார். அதாவது, தன் உயிரை மாய்த்துக் கொள்ளத்தலைப்பட்டார். இதனைச்

சேக்கிழார் கூறுகிறார் பாருங்கள்.

*எந்தையும் எம்அனையும் அவர்க்கெனக்*
*கொடுக்கஇசைந்தார்கள்*
*அந்தமுறையால் அவர்க்கே*
*உரியது நான் ஆதலினால்*
*இந்த உயிர் அவர் உயிரோடு*
*இசைவிப்பன் எனத்துணிய*
*வந்தவர்தம் அடியிணைமேல்*
*மருணீக்கியார் விழுந்தார்.*

மாதினியார் மகளார் அல்லவா திலகவதியார். திருநாண் பூட்டியிருந்த மணவாளர் புகழனார் மரித்தார் என்று உடனே உயிர் துறந்தார் மாதினியார். திருநாண் பூட்ட இருந்த மணவாளர் கலிப்பகையார் மறைந்தார் என்று உயிர்விடத் துணிந்துவிட்டார் திலகவதியார். அவர் தமிழ்நாட்டுப் பெண் குலத்தின் தவக்கொழுந்து. தியாகத்தின் தீபமங்கலசோதி. பெண்மையின் பெருமைக்குன்று.

திலகவதியாருடைய புனிதத் தன்மையும், தூய உள்ளமும், தெய்வக் கற்பும், உயரிய பண்பாடும் அக்காலத் தமிழகத்தின் உயர் பெண்மையின் உச்சத்திற்கு ஏற்ற சான்று பகர்வனவாகும். இக்கால உலகம் அவரை உணர்ந்து கொள்வது சிறிது கடினமாகத் தான் இருக்கும். அவரை நன்கு உணர்வதற்கு அக்காலத் தமிழ்மரபுகளையும் பெண்பாலார் பண்புகளையும் தெள்ளத்தெளியத் தேறி உணர்தல் அவசியமாகும்.

அக்காலத் தமிழ்ப்பெண்களின் சிறப்பு, கொண்ட கணவன் நல்லனாயினும் சரி, பொல்லனாயினும் சரி, மன்மதன் போல் மாட்சி மிகுந்தாலும் சரி, கெட்டழகனானாலும் சரி, பெற்றோர்கள் மனமுவந்து கொடுத்துவிட்டால் போதும்; தமிழ்ப்பெண்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வார்கள். நெஞ்சாலே நேர்ந்து அவனுக்கு வழிபாடும் செய்வார்கள். இதனை, சிந்தாமணி நூலும் சித்தரித்துக் காட்டுகிறது.

*"நம்புநீரர் அல்லர் நன்குரங்கு நீரராயினும்*
*தம்குரவர் தாங்கொடுப்பின் நெஞ்சுநேர்ந்தது தாழ்வர்*
*தாம்பொங்கரவ அல்குலார்"*

இப்பாடலின் பொருட்சிந்தனை : நம்பு – என்றால் நசை விருப்பம் ஆகும். "நம்புநீரர்" என்றால், மகளிரால் விரும்பப்படும் தன்மை உடையவர் என்பதாம்; பொல்லாங்குக்கு நன்றான குரங்கு ஆதலால் "நன்குரங்கு" என்றார். பொல்லாங்கு செய்வதிலே மிக நல்ல குரங்காம்; தம் குரவர் என்றால், நமது பெற்றோர்கள் என்பதாம்.

ஒரு பெண்ணை ஒருவனுக்குக் கொடுப்பதாக அவளுடைய தாயோ தந்தையோ சொல்லிவிட்டால் போதும், பெண்ணானவள் அவனைக் கெட்டியாகப் பற்றிக்கொள்வாா். பின் அவளுடைய பெற்றோர்களாலேயே அதனை மாற்றமுடியாது. இவ்வாறு "அப்பர் விருந்"தின் நூலில் திலகவதியார் வரலாற்றை, உயர்தமிழ்நடையில் பேராசிரியர் அமரர்.கோ.சுப்பிரமணியபிள்ளை வழங்கி, தமிழின்பம் தருவதைப் படித்து மகிழலாம். அவரை வணங்கி வாழ்த்துவோமாக.

---

## இசைவடிவாய் இருப்பவனே இறைவன்

நமது கடவுள் வடிவங்கள் அனைத்துக்குமே இசை ஆதாரவடிவாக நிற்கிறது. மத்தளம் இல்லாத நந்தி இல்லை. வீணை இல்லாத கலைமகள் இல்லை. புல்லாங்குழல் இல்லாத கண்ணன் இல்லை, ஆம் நான்கு வேதங்களையும் ஓதும் போது நான்கு வகையான ஒலி ஒலிக்கிறது. "ஓம்" என்கிற பிரணவ மந்திரத்தைக் கூட்டாக உச்சரிக்கும் போது அந்த ஒலி இயற்கையில் எதிரொலிக்கிறது. சங்கு ஊதினால் அவரைக் கொடி நன்றாகக் காய்க்கிறது. வயலின் இசையில் மயங்காத மயில்களே இல்லை எனலாம். ஆம் அறிவற்ற உயிர்களையும், அசையாப் பொருள்களையும் தன்வயப்படுத்திக் கொள்கிறது. எனவே தான் இறைவன் ஏழிசையாய் இசைப்பயனாய் இருக்கிறான். ஆம் இசை வடிவாய் இருப்பவனே இறைவன்.

– திருச்சி சரோஜா இராமமூர்த்தி

"மக்கள் சிந்தனை"யில் வெளிவரும் கட்டுரைகள், கவிதைகள் பிற ஆக்கங்களில் இடம்பெறும் கருத்துக்களுக்கு அவற்றை எழுதியவர்களே பொறுப்பாவர்.

– ஆசிரியர்

# என் மனம் இன்பக் கேணி

(கவிஞர். உஞ்சனை. உழவன்)

வள்ளுவனின் திருக்குறளை வரிவிடாமல்
வாய்விட்டுப் படிப்பதிலே எனக்கு இன்பம்;
தெள்ளுதமிழ்க் கவிதைகளைத் தேடித் தேடித்
தேயமெலாம் அலைந்தாலும் இன்பம், இன்பம்!

தமிழறிந்த ஆசான்மார் தாள்பணிந்து
தனித்தமிழைக் கேட்டறிதல் எனக்கு இன்பம்;
அமிழ்தினிய தமிழ்மொழியை ஆட்சிக் கட்டில்
அமர்த்திவைத்து அழகுபார்க்க மிகவும் இன்பம்!

நோய்நொடிகள் இல்லாமல் நூறு ஆண்டு
நுண்தமிழைப் படிப்பதற்கு எனக்கு இன்பம்;
தாய்முகத்தைப் பார்ப்பதுமே தாவி ஓடும்
தளிர்மகவாய்த் தனித்தமிழைச் சுவைக்க இன்பம்!

எங்கும்தமிழ், எதிலும்தமிழ் என்று ரைத்த
பாவேந்தர் சுவைத்தமிழைப் பருக இன்பம்;
மங்காத புகழ்நிலைத்த மாத்தமிழை
மனத்தினிலே இறுகணைத்து மயங்க இன்பம்!

---

நமது வாழ்க்கை எங்கே போய்க்கொண்டிருக்கிறது? உண்டியை, உடையை உகந்து மகிழும் வெற்று வாழ்க்கையாக ஓடிக்கொண்டிருக்கிறது. இந்தப் போக்கை மடைமாற்றம் செய்வோம்! வாழ்வாங்கு வாழும் திசையில் நடைபோடுவோம்! அறிவறிந்த ஆள்வினை மேற்கொள்வோம்! அறிவறிந்த ஆள்வினை மேற்கொள்வோம்! பொருள் செய்து குவியுங்கள்! உலகம் உண்ண உண்ணுங்கள்! உலகம் உடுத்த உடுத்துங்கள்! சிறந்த ஆன்மிக வாழ்க்கை வாழ்வோம்! அன்பையே உயிர் எனக் கொள்வோம்! வளமுடன் வாழ்வோம்! இலட்சிய சமுதாயம் அமைப்போம்!

– அருள்நெறித்தந்தை

# திருக்குறள் – தேர்வும் தெளிவும்

(மு. பழனி இராகுலதாசன்)

"நல்வாழ்க்கைத் திருக்குறள் நூறு" என்று ஒரு சிறிய புத்தகம். நூறு திருக்குறள்களைத் தேர்வுசெய்து சிற்றுரையும் பொருளும் எழுதியிருக்கிறார்கள் சமுதாய முனிவர் தவத்திரு பெரியசந்நிதானம் அவர்கள். சென்னை "அன்னை புத்தகாலயம்" வெளியிட்டிருக்கிறது. அழகிய வடிவம், நேர்த்தியான அச்சமைப்பு; லாப நோக்கம் கருதாமல் சமுதாயப்பணி என்றே மேற்கொண்டு ஆறு ரூபாய் விலையில் வெளியிடப்பட்டுள்ளது. ஆசிரியப் பெருமக்கள் நூலைப் பல பிரதிகள் விலைக்கு வாங்கி இளைய சமுதாயத்தினர்க்கு வழங்கலாம்.

நூறு குறள்களைத் தேர்வு செய்தவர் தவத்திரு பெரிய சந்நிதானம், தேர்வு செய்து அவர்களே குறிப்புரையும் பொருளும் எழுதியுள்ளார்கள் என்றவுடன் பார்க்கவும் படிக்கவும் ஆர்வம் இயல்பாகவே எழுந்தது.

1330 - அருங்குறள்கள்; அவற்றுள் இளைய சமுதாயத்தினர் படிக்கவும், படித்துச் சிந்திக்கவும் உதவும் வகையில் "ஒரு நூறு" குறள்களை மட்டுமே தேர்வு செய்வது என்பது சற்றுக் கடினமான பணிதான். எதை விடுவது? எதைச் சேர்ப்பது? ஏதாவது ஒரு அடிப்படை வேண்டுமே. எந்த முன்கருதுகோளும் இல்லாமல் ஒரு நூறு குறள்களைத் தேர்வு செய்ய இயலாது. ஆனால் தவத்திரு பெரிய சந்நிதானம் அவர்கள் ஒரு கொள்கையின் அடிப்படையில்தான் "ஒரு நூறு" குறள் என்பதைத் தேர்வு செய்துள்ளார்கள். இந்த ஒரு நூறு குறள்கள் யாருக்கு? என்பது மிக முக்கியமானது என்பதைத் தவத்திரு சந்நிதானம் அவர்கள் மனத்தில் கொண்டு தேர்வு செய்து குறிப்புரையும் பொருள் உரையும் செய்துள்ளார்கள். தவத்திரு மகாசந்நிதானம் அவர்களுக்கு எப்போதுமே சமுதாயமும், சமுதாயத்தின் இளைய மாந்தருமே மிகவும் முக்கியமாக இருப்பார்கள்; அந்தச் சமுதாயம் உயிர்ப்புடன் இயங்கிக் கொண்டே இருக்கவேண்டும் என்பதில் எப்போதும் கண்ணும் கருத்தும் செலுத்துவார்கள். "உயிர்ப்புடன் இயங்கி, இயக்கி வாழ்தலே வாழ்க்கை" என்பது குருமகாசந்நிதானம் அடிக்கடி வற்புறுத்திச் சொல்லிய வாழ்வியல் தாரக மந்திரம் என்றே சொல்லலாம்.

எனவே, "நல்வாழ்க்கைக்குத் திருக்குறள் நூறு" என்று மகுடம் இட்டு ஒரு நூறு குறட்பாக்களைத் தேர்வு செய்யும் போது இயல்பாகவே பல குறட்பாக்கள் முயற்சித் திருக்குறட்பாக்களாகவே அமைந்துவிடுகின்றன. இந்த அழகிய சிறிய தொகுப்பு நூலின் முக்கியமான அம்சமே அதுதான்

என்றே கொள்ளலாம். அதாவது குருமகாசந்நிதானம் தொகுப்புப் பணியில் ஈடுபட்டபோது அவர்களுக்கே உரிய சிறப்புப் பார்வைக்கு ஏற்ப ஒருநூறு குறட்பாக்களில் முயற்சிக் குறள்கள் மிகுதியாய் இடம்பெற்றுள்ளன என்பது முக்கியமான செய்தியாகிறது.

முயற்சி, இயக்கம், தொழில் ஆற்றுதல் என வாழ்க்கையின் கூறுகள் எவையாயினும் அறம்தான் முக்கியம் என்பதைத் தள்ளமுடியாது. இயல்பாகவே முதலாம் குறளிலிருந்து தொடங்குகிற குருமகாசந்நிதானம், மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன் என்பதைத் தேர்ந்து, அதற்கு உரிய விளக்கமும் தந்து, மேலும் பல அறம் சார்ந்த குறட்பாக்களைச் சொல்லிவிட்டு மிக விரைவாக முயற்சிக் குறள்களுக்கு வந்துவிடுகிறார்கள். தொகுப்பில் 54-ஆம் குறளாகவும், குறள்நூலில் 485-ஆம் குறளாகவும் உள்ள,

"காலம் கருதி இருப்பர், கலங்காது
ஞாலம் கருது பவர்"

என்ற குறளிலிருந்து, தவத்திரு மகாசந்நிதானம் முயற்சிக் குறள்களுக்கு வந்துவிடுவதைக் காணலாம். தொடர்ந்து 491, 516, 537, 603, 611, 666, 672, 750, 759, 1023, - ஆகிய திருக்குறள் பாக்களை முயற்சித் திருக்குறளாகக் காட்டி குருமகாசந்நிதானம் உரை எழுதிச் செல்கிறார்கள். இறுதியில் 100-ஆவது எடுத்துக்காட்டாக, 1023-ஆம் குறள் அமைகிறது.

"குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந்து உறும்"

- என்ற குறளை நூறாவது எடுத்துக்காட்டாகக் காட்டியுள்ள நயமும், எழுதியுள்ள உரைச் செறிவும் அற்புதமானவை. "முயன்று பணி செய்தால், தெய்வம் தானாகவே வந்து நின்று துணை செய்யும்" என்று குருமகாசந்நிதானம் எழுதியிருப்பது வெளிப்படை உரை; "தெய்வத்தை எதிர்பார்த்துக் காத்திருக்காதே, செயல்படு, செயல்படு" என்று அடிகள் வழங்குகிற உரை, உள்ளுறை.

நூலின் தொடக்கத்தில் திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பகுதியிலிருந்து மூன்று குறட்பாக்களை (1,2,4) தேர்வு செய்து கடவுள் வாழ்த்தின் இன்றியமையாமையை எடுத்துரைக்கும் தொகுப்புரையாசிரியர் தவத்திரு குருமகாசந்நிதானம் அவர்கள், நூலின் இறுதிக் குறளில் "இறைவனை எதிர்பார்க்க வேண்டாம், அவன் தானாகவே வருவான்" என்று எழுதியிருப்பது நினைத்து நினைத்துச் சுவைக்கத்தக்க சமுதாய முரண் அழகு ஆகும்.

---

# பூவும் நாரும் – 23

(சாமி. தியாகராசன்)

## சில நிகழ்ச்சிகள் – சில செய்திகள் : 3

நிகழ்ச்சிகள் :

1. கும்பகோணத்தில் இருக்கின்ற மேனிலைப்பள்ளிகளில் ஆண்டுத் தொடக்கத்தில் நடைபெறும் மாணவர் சேர்க்கையின்போது எனக்கு வேண்டப்பட்டவர்களின் பிள்ளைகட்காக அந்தப் பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களிடம் சில பரிந்துரைகளும் செய்வேன். அவர்களும் இயன்றளவில் இடம்தருவர்.

எனக்கு மிக மிக நெருக்கமான நண்பர் என்னை அணுகி குறிப்பிட்ட பள்ளியில் ஆங்கிலவழி வகுப்பில் ஆறாம் வகுப்பில் இடம் வாங்கித்தரவேண்டும் என்றார். அவர் சாமிக்கும் மிக வேண்டியவரே. ஆங்கிலவழி கூடாது, தமிழ்வழியே வேண்டும் என்ற கொள்கையில் இருந்த நான், என் பிள்ளைகள் தமிழ் வழியிலேயே படித்தவர்கள் என்பதை நீங்களும் அறிவீர்கள். நாம் தமிழ் வழியிலேயே நம் பிள்ளைகளைப் படிக்கவைக்கவேண்டும் ஆதலால் தமிழ்வழியில் இடம் கேட்போம் என்றேன்.

என்னுடைய இந்த நிலைப்பாட்டை அவர் ஏற்கவில்லை. அதனை வெளிப்படையாகவும் காட்டிக்கொள்ளவில்லை. நண்பர் குறிப்பிட்டுக் கேட்ட அந்த மேனிலைப்பள்ளியின் தமிழாசிரியராகவும், உதவித் தலைமை ஆசிரியராகவும் ஒரு பாதிரியார் இருந்தார். நல்ல படிப்பாளி. நல்ல பேச்சாற்றலுடையவர்.

சாமியால் தோற்றுவிக்கப்பட்ட "திருவருள் பேரவையில்" ஈடுபாடுடையவர். சாமிக்கும் அவருக்கும் நல்ல அறிமுகம் உண்டு. அந்த வகையில் மேலே குறிப்பிட்ட அந்தப் பாதிரியாரை நண்பர் அணுகித் தன் மகனுக்கு ஆங்கில வழி வகுப்பில் இடம் வேண்டும் எனக் கேட்க, அவரும் ஆகட்டும் பார்க்கலாம் எனச் சொல்லிக் காலம் கடத்திவிட்டுக் கடைசியில் கையை விரித்துவிட்டார்.

நண்பர் விரும்பிய அந்தப் பள்ளியில் அவர் மகனுக்கு இடம் கிடைக்காத நிலையில், மனம் நொந்துபோன அவர் வேறு பள்ளியில் மிகவும் சிரமப்பட்டு ஆங்கில வழியிலேயே இடம் வாங்கிப் படிக்கவைத்தார். அந்தப் பிள்ளை இப்போது நன்னிலையில் இருக்கின்றான்.

பாதிரியாரை நம்பி தான் பட்ட துன்பத்தை நண்பர் என்னிடம் பின்பு சொல்லிப் புலம்பினார். அந்தப் பாதிரியாரும் நானும் நல்ல நண்பர்களே.

கும்பகோணத்தில் "திருவருள் பேரவைச்" சார்பில் இந்தப் பாதிரியார் ஓர் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார். அந்தக் கூட்டத்தில் பங்கேற்க சாமி குடந்தைக்கு வந்தார்கள். வழக்கம் போல நானும் இந்தப் பகுதியில் மட்டும் பெயர் குறிப்பிடாத அந்த நண்பரும் பயணியர் விடுதிக்குச் சென்றிருந்தோம்.

பாதிரியார் ஏற்பாடு செய்திருந்த அந்தக் கூட்டம் மாலையில் நடைபெற காலம் குறிக்கப்பெற்றிருந்தது. கூட்டத்திற்குச் செல்ல சாமி ஆயத்தமாகி, போவோமா என்றார்கள். "கூட்டத்திற்கு என்னை அழைக்கவில்லை" என்றேன். "என்ன? அழைப்பில்லையா!" என்றார்கள். ஆம் என்றேன். சாமி தயங்கி நின்றார்கள்.

அப்போது எனக்கு அருகில் நின்றிருந்த நண்பரும் தனக்கு அழைப்பில்லை என்று சொல்லியதுடன், தன் மகனுக்கு அந்தப் பாதிரியார் பள்ளியில் இடம் தரவில்லை என்பதையும் சொன்னார். இருவரும் சொல்லியதைக் கேட்டுக் கொண்ட சாமி, சரி! வாருங்கள் போவோம் என அறையைவிட்டு வெளியே வந்து காரில் அமர்ந்து எங்களையும் ஏறும்படிச் சொன்னார்கள். நாங்கள் ஏறி அமர்ந்த பின்பு நேரே "நல்லூருக்குப் போ" என ஓட்டுநருக்கு உத்தரவிட்டார்கள். கார் நல்லூருக்குச் சென்றது.

திருநல்லூர் தமிழ்நாட்டு வரலாற்றிலும், சைவ சமய வரலாற்றிலும் மிகவும் முக்கியமான ஒரு தலமாகும். அந்த ஊரில் கோயில் கொண்டுள்ள இறைவன் திருநாமம் கல்யாண சுந்தரேசுவரர். இறைவி கல்யாணசுந்தரி. கோச்செங்கணான் கட்டுவித்த மாடக் கோயில்களில் மிகச் சிறப்புடையது. "நிறங்கள் ஓர் ஐந்துடையாய்" என்று மாணிக்கவாசகர் சிறப்பிக்கும் ஐந்து நிறங்களை ஐந்து வேளைகளில் காட்டிக் கொண்டு பொன்மேனியனாய்

எழுந்தருளியிருக்கும் இலிங்கத் திருமேனியை இந்தக் கோயிலில் மட்டும்தான் காணமுடியும். திருவாவடுதுறை ஆதீனத்தின் அருளாட்சிக்குட்பட்டது இத்திருக்கோயில். மாசி மகத் திருவிழா மிக முக்கியமானது. மகத்துக்கு நல்லூர் மகாமகத்துக்கு கும்பகோணம் என்பது வழக்கு.

"நனைந்தனைய திருவடியென் தலைமேல் வைத்தார்
நல்லூர்எம் பெருமானார் நல்ல வாறே"

என்று தாம் நினைந்து உருகும் வண்ணம் அப்பரடிகளுக்கு இறைவன் திருவடி தீட்சை செய்த தலம். அப்பா சுவாமிகளுக்குத் திருவடி தீட்சை இங்கே நடந்ததால் இத்திருக்கோயிலில் மட்டும் வழிபடுவோருக்குச் "சடாரி" வைக்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது.

அமர்நீதி நாயனாரை ஆட்கொள்ள வந்த ஈசன் இத்தலத்தில் நடத்திய நாடகம் அற்புதமானது. மறைகளே பெருமானின் கோவணம் என்பது புராணக் கொள்கை. அந்த வகையில் பிரானது கோவணமும், அமர்நீதியாரின் அன்பு குறைபடா அடிமைத் தொண்டும் (அதாவது வேதமும் அன்பும்) சரிநிகர் சமானம் என்பதை உலகவர் அறிய ஈசன் உணர்த்திய தலம் திருநல்லூர்.

அப்பரடிகளிடத்து தமது நெஞ்சத்தை வைத்தவர்கள் நமது சாமி. பெரியபுராணத்து அடியவர்களின் தொண்டின் சிறப்புக்களையும், அவர்களது அன்பின் திறத்தையும் வாய்வலிக்காமல் சொல்லியும், கைவலிக்காமல் எழுதியும் வந்தவர்கள் நமது சாமி. அத்தகைய இயல்புடைய நமது சாமிக்கு நல்லூரில் மிகுந்த ஈடுபாடு உண்டு. குடந்தைக்கு வரும் போதெல்லாம் நேரம் கிடைக்கும் போதெல்லாம் நல்லூருக்குச் சென்று வழிபடுவார்கள். நானும் உடன் செல்வேன். ஈசன் எழுந்தருளி அமர்நீதியாரை ஆட்கொண்ட அந்த நல்லூருக்குத்தான் கார் சென்று சேர்ந்தது. காரிலிருந்து இறங்கி வழக்கம்போல் இறைவனை வழிபட்டு பின்பு குடந்தைக்குத் திரும்பினோம். தன்னைச் சார்ந்தவர்களுக்கும், தொண்டர்களுக்கும் உரிய இடத்தைத் தராதவர்களைச் சாமி பொறுத்துக் கொள்ளமாட்டார்கள் என்பதைப் பாதிரியார் ஏற்பாடு செய்திருந்த கூட்டத்திற்குச் செல்லாமல் அதனைத் தவிர்த்ததிலிருந்து நாங்கள அறிந்து கொண்டோம்.

2. திருக்கோயில் கோபுரங்களிலும், மதில் சுவர்களிலும் பறவைகள் எச்சமிட, அதிலிருந்து வளர்ந்து கிளைத்துப் படர்ந்து கிடக்கும் செடிகளை, ஏன் சிறு மரங்களைக்கூட இன்றும் நாம் காணலாம். இவற்றைக் களைந்து கோபுரங்களுக்குச் சேதம் வராமல் பாதுகாக்க வேண்டும் எனச் சாமி முனைந்து பாடுபட்டார்கள். அதற்கென உழவாரத் திருப்பணியைத் தொடங்கினார்கள்.

அந்த வகையில் நல்லூர் கோயில் உழவாரத்திற்கு நண்பர் ஆதீனமிளகி பொறுப்பாளரானார். தேவார வைப்புத் தலங்களுள் ஒன்றான கொட்டையூர் கோடீஸ்வரர் திருக்கோயில் உழவாரத்திற்கு நான் பொறுப்பளரானேன்.

சாமி கொண்டுவந்து தரும் அந்தத் திரவமருந்து நல்ல வீரியமுடையது. அதனை உரிய முறையில் பயன்படுத்தவில்லையாயின் மருந்தினால் பயன் இல்லாமல் போய்விடும். செடிகளை அடியோடு வெட்டி விட்டு அந்த இடத்தில் மட்டும் மருந்து வைப்பதால் பயன் இல்லை என்பதைச் சாமி சொல்லுவார்கள். செடிகளின் வேர்ப்பகுதி எங்கே சென்று ஊடுருவி உள்ளது என்பதை நன்கு அறிந்து அந்தப்பகுதியின் கட்டடப் பகுதியை நன்கு குத்திக் கிளறி அவ்விடத்து வேரில் மருந்து வைக்க வேண்டும் என்பார்கள். இந்த முறையில் இரண்டு மூன்று தடவைகள் மருந்து வைத்தால் செடிகளின் வேர் பட்டுப்போய் மீண்டும் முளைக்காது.

நாங்கள் தக்க உதவியாளர்களையும், விடுமுறைக் காலங்களில் மாணவர்களையும் இதற்காகப் பயன்படுத்தினோம். நல்ல பலன் இருந்தது.

நல்லூர் கோயில் பிரகாரங்கள், நந்தவனம் ஆகியவை நன்கிருக்கும். கோட்டையூர் கோயில் அவ்வாறில்லாமல் நந்தவனம் புதர் மண்டிக் கிடந்தது. கொட்டையூரில் குடியிருந்தவரும், "ஈஸ்வரி இன்ஸ்டிடூட்" என்னும் பெயரில் தட்டச்சுக் கற்றுத்தரும் நிறுவனத்தை நடத்தியவருமாகிய நண்பர் சுப்பிரமணியத்தின் ஆர்வத்தினால் ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று பத்துப் பதினைந்து மாணவர்களை அழைத்துக் கொண்டு கொட்டையூர் சென்றேன். நண்பர் சுப்பிரமணியன் மாணவர்கட்குத்

தேவையானவற்றைக் கவனித்துக் கொண்டார். காலை 10 மணிக்குத் தொடங்கிய பணி மாலை 4 மணிக்குள் நிறைவெய்தியது. திருக்கோயில் நந்தவனமும், பிரகாரமும் தூய்மைபெற்றன. இந்தப் பணி நிறைவுற்ற பின்னர் சாமி குடந்தைக்கு வந்தபோது எங்கள் அழைப்பை ஏற்றுக் கொட்டையூருக்கு வந்து நடந்து முடிந்திருந்த பணிகளைப் பார்வையிட்டுப் பாராட்டினார்கள்.

பல ஊர்களிலும் இந்தப் பணி நடந்தது. ஆனால் வழக்கம் போல் இதுவும் காலம் செல்லச் செல்ல தொய்வுற்றது. ஒரு கட்டத்தில் நின்று போய்விட்டது என்று கூடச் சொல்லலாம்.

இப்படிப்பட்ட எத்தனையோ நிகழ்வுகள், செய்திகள் சாமியைச் சுற்றிச் சுற்றி எனது நினைவலைகளில் வந்து செல்கின்றன. அத்தனையும் பதிவுசெய்ய இடமின்மையால் இத்துடன் இவற்றை விடுத்து மேலே செல்கிறேன்.

(தொடரும்)

---

சமூகத்தின் இளைய தலைமுறையினரை சரியான பாதையில் பேசவும், பழகவும் அவர்களை வழிநடத்தவும் கல்லூரிகள் பெரும் பங்குவகிக்கவேண்டும். இன்றைய இளைய தலைமுறையினர் எதையோ தொலைத்துவிட்டு எதையோ தேடுகின்றனர். இளைஞர் சமுதாயம் இன்றைக்கு மாமனார் வீட்டுச் சீதனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. பெண்கள் அழகிப் போட்டிகளில் பங்கேற்பதைவிட அறிவுப் போட்டியில் பங்கேற்பதைத்தான் விரும்பவேண்டும். பெண்கள் படித்துப்பெற்ற பட்டத்தை அலுவலகத்தில் பணிபுரிய மட்டுமின்றி தான் பெற்ற கல்வியை சமூக முன்னேற்றத்திற்காக ஏதாவது ஒரு வகையில் பயன்படுத்த முன்வரவேண்டும்.

**– தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

ஜுலை – 3ல் காரைக்குடி டாக்டர் உமையாள் ராமநாதன்
மகளிர் கல்லூரி விழாவில் உரையாற்றியது.

# ஆதீனத்தின் அடி தொழுவோம்!

(பொறி.தி.த. சண்முக வடிவேல் பி.இ.)

உழைப்பதென்பது உறுதியானால், மனிதர்க்கு
உழைப்பு - என்பது வயதைத் தருமென்று,
குன்றக்குடி மக்களை - எதிலும்
குன்றா - குடி மக்களாய் ஆக்கியவன் நீ!

எல்லாரும்
தன் குலப் பெருமையைப் பேச - நீதான்
ஊர் குளப் பெருமையைப்
பேணிப் பாதுகாத்தாய்!

பலரும்
ஏழைகளிடம் இறையைப் பற்றி மட்டுமே
பிரசங்கம் செய்ய -
ஏழைகட்கு இரையைப் பற்றிப் பேச
சங்கம் வைத்தவன் நீ!

எளியவரும்
சமமாய்ப் பூப்பறிக்க நந்தவனங்களும், ஏழைக்கு
சமவாய்ப்பளிக்க திட்டங்களும் தீட்டி

கள்விற்பனையாளர்களை எல்லாம்
கல்விப்பணியாளர்களாக்கி

நாதியற்ற தமிழினத்தை
சாதியற்ற சமுதாயமாய்
உருவாக்க உழைத்தாய்!

நீயும் பெரியாரும்
துருவங்களில் இரண்டாக - ஆனால்
உருவங்களில் ஒன்றாக இருந்தீர்கள் - அது
தமிழர் மானம் வென்றாக

சமயத்தின் பேரால்
சண்டைக் காடாக
மண்டைக் காடு
மாறிய சமயத்தில்
உன்
சொல்லிணக்கத்தில் சொக்கித்தானே - மத
நல்லிணக்கத்தில் இணைந்தார்கள் - அம்மக்கள்

மகாசதியால்
மசூதியொன்று இடிக்கப்பட
கலவரம் பரவிடும்
நிலவரம் அறிந்தும்
எல்லாரையும்
சமாதானம் செய்த - ஒரே
சன்னிதானம் நீ தானே!
தமிழர் மேல் படர்ந்த
ஆதி - ஈனத்தை அகற்றவந்த
ஆதீனத்தை அடிதொழுவோம்.

---

## மரியாதை

டால்ஸ்டாய் ரயில்வே நிலையத்தில் நின்று கொண்டிருந்தார். ஒரு பிச்சைக்காரன் பிச்சை கேட்டான். டால்ஸ்டாய் சகோதரனே உனக்கு தருவதற்கு என்னிடம் ஒன்றுமில்லையே என்றார். அந்தப் பிச்சைக்காரன் ரொம்ப நன்றிங்க என்றான். டால்ஸ்டாய் "நான்தான் உனக்கு ஒன்றும் தரவே இல்லையே, நன்றி சொல்கிறாய்" என்று கேட்டார். அவன் "என்னை எல்லோரும் பிச்சைக்கார நாயே என்று திட்டுவார்கள். நீங்க என்னை சகோதரா என்று சொன்னதற்கு மகிழ்ந்தேன்" என்றான். பிச்சைக்காரர்.

### அமைதி

அமைதி என்றால் சண்டையற்ற தன்மை என்று மட்டும் கருதக்கூடாது. நல்லெண்ணத்தின் அடையாளம், உடன்பட்ட கொள்கைகள் இணக்கமும், ஒத்துழைப்புத் தன்மையும் வாய்ந்த செயற்பாடுகள் பொருந்தினாலேயே அமைதியாகும்.

\- அருள்நெறித்தந்தை

# குன்றக்குடி குடமுழுக்குவிழா வாழி!

(வித்துவான். தா. குருசாமி தேசிகர்)

நம்பனருள் ஆகமத்தின் திருநெறியும் மற்றும்
ஞானநூற் பொருளுமெலாம் தமிழிலுற எண்ணி
செம்பொருளின் திறங்காட்டும் திருக்குறளைப் பேணிய
செம்பொன்னார்! பொன்னம்பலவடிகள் பணியில்
எம்முருகன் எழுந்தருளும் குன்றக்கு டித்தலம்
ஏற்றமுடன் திருப்பணியால் உச்சம்மிக மண்டபம்
நம்மையெலாம் நிழல்பெறவே சிமிட்டியினால் நிறுத்தி
நம்மயில்ம லையினிலே குருவருளைக் கொட்டினார்.

அருணெறியின் தந்தையரும் விண்பழித்தே வந்தே
அரும்பணியின் திறம்பார்த்தே வியந்திட்டார் - நம்பின்
திருநாடும் வளர்வதனை யார்மறுப்பார்? அதுபோல்
திருப்பணிகள் நாட்டாரும் நகரத்தார் மெச்சவே
திருமரபின் முன்னோரும் வாழ்த்திடவே திருப்பணித்
திருச்செயல்கள் காட்டினவே! பலலக்க மக்கள்
அரும்வாழ்த்தும் அடிகளவர் பெற்றிட்டார்! வாழி!
ஆர்வமுடன் தொலைநின்றே தெரிசித்தேன் வாழி!

நேர்வந்தே குடமுழுக்கின் மறுநாள்
செயல்திறப்பணிவியந்தே தரிசித்து வந்தேன்
என்உளம் வட்டமாடி வளாகத்தையே
சூழ்ந்த மகிழ்வில் சமர்ப்பிக்கும் எண்ணம்

---

ஞான வாழ்க்கைக்கும் தளராத உழைப்புத்தான் தேவை. உலகியல் பொருளாதார முன்னேற்றத்திற்கு மட்டுமே உழைப்பு தேவை என்று கருதக்கூடாது. ஞான வாழ்க்கைக்கும் இடையீடில்லாத, தொடர்ச்சியான, சோர்வில்லாத முயற்சி தேவை. அக நிலையிலும் தேவை, புற நிலையிலும் தேவை. ஞான வாழ்க்கையில் கடுமையாக உழைத்தால் இப்பிறப்பிலேயே, உயிர் நிலையிலேயே ஞானம் பெறலாம்.

– அருள்நெறித்தந்தை

பங்குனி – சித்திரை "மக்கள் சிந்தனை" இதழ் வரப்பெற்றேன். அட்டையில் திருக்குட நன்னீராட்டுக் காட்சியும் சன்னிதானத்திடம் கண்டு நேரில் கலந்து கொண்டு தரிசிக்க இயலாக் காட்சியைக் கண்டு அகமகிழ்ந்தேன்.

இதழின் உள்ளே அமைந்துள்ள திருக்குட நன்னீராட்டு விழாப் புகைப்படங்கள் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. படங்களுக்கான அடிக்குறிப்பு மிகவும் அருமை.

"நம் கடன் பணி செய்து கிடப்பதே" தலையங்கக் கட்டுரை திருக்குட நன்னீராட்டு பாலாலயம் முதல் அனைத்து நிகழ்வுகளையும் சிறப்பாக ஒன்று விடாமல் ஒருவரையும் விடாமல் பாராட்டியதுடன் நேர்முக வர்ணனை போலத் தெளிவாக உள்ளது. கலந்துகொள்ள இயலவில்லையே என ஏங்கிக் கொண்டிருந்த எம் போன்றவர்களுக்கு தலையங்கக் கட்டுரை அந்த ஏக்கத்தைப் போக்கி நிறைவழிப்பதாக அமைந்துள்ளது. நன்றி!

– கவிஞர். மு.சு. சங்கர்

---

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

குன்றக்குடி

# அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவைத் தொடர்ந்து நடைபெற்ற

## நமண்டலாபிஷேக நிறைவு விழா

## சிறப்புமலர் வெளியீட்டு விழா

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா 19.3.2014 புதன்கிழமை காலை 10.30 மணியளவில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அதன் பின் தொடர்ந்து மண்டலாபிஷேக வழிபாடுகள் நடைபெற்று 3.5.2014 சனிக்கிழமை காலை மண்டலாபிஷேக நிறைவு விழா முறைப்படி நடந்து நிறைவேறியது. அன்று பகல் 11.15 மணியளவில் ஆதீனக் கொலு மண்டபத்தில் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாச் சிறப்புமலர் வெளியீட்டு விழா நிகழ்ந்தது. திரு. மாசிலாமணி ஓதுவார் மூர்த்திகள் இறைவணக்கப் பாடலுடன் தொடங்கப்பெற்ற இவ்விழாவில் வாழ்த்து பாடினார். முனைவர். சொ. சேதுபதி வரவேற்புரை ஆற்றினார். 46வது திருவருள்திரு குருமகா சந்நிதானம் அவர்கள் விழாத் தலைமை வகித்து திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாச் சிறப்பு மலரை வெளியிட்டு சிறப்பித்தருளினார்கள். மலர்ப்பிரதிகளை அறமனச் செம்மல் திருமிகு. AR. ராமசாமி , "அறமனச்செம்மல்" PL. வீரப்ப செட்டியார், திருமதி. சாந்தி சின்ன சேவுகன், திருமிகு. R. சிவக்குமார், திருமிகு. அய்யப்பன் ஆகியோரும், பெருமக்களும் பெற்றுச் சிறப்பித்தனர். சிவநெறிச் செம்மல் டாக்டர். சிவத்திரு கி.பிச்சைக்குருக்கள், அருள்திரு கோவிந்தானந்த சுவாமிகள் இருவரும் வாழ்த்துரை வழங்கினர். தமிழாகரர் செந்தமிழ்வாரிதி, திருமிகு. முனைவர்.இரா. செல்வக்கணபதி, சிறப்புரை ஆற்றினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் அருளாசி உரை ஆற்றித் திருப்பணியில் சிறப்பாகப் பங்கெடுத்தவர்களுக்கும் பணி செய்தவர்களுக்கும் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள். நன்றியுரைக்குப் பின் மங்கல வாழ்த்துடன் விழா இனிதே நிறைவெய்தியது.

உ

"மக்கள் சிந்தனை" சிறப்பாசிரியர்

# தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

அவர்களுக்கு

# ஸ்ரீ மகாத்மா ஜோதிராவ் பூலேய் விருது

## (Sri Mahatma Jyothi Rao Phooley Award)

கல்கத்தாவில் இந்திய அளவிலான அனைவருக்கும் கல்வி மற்றும் வளர்ச்சி என்ற அமைப்பு (AICMED) All India Council for Mass Education & Development) இயங்கிவருகிறது. இதன் தென்மண்டல அமைப்பு (SIRC) South India Regional Committe ஆந்திரா, தமிழ்நாடு, கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்கள் அளவில் "திருப்பதி ஸ்ரீ வேங்கடேசுவரா பல்கலைக்கழகத்தில்" தென்மண்டல அலுவலகம் அமைத்துச் செயல்பட்டுவருகிறது. இந்த அமைப்பு கல்வி வளர்ச்சி, நிர்வாகம், பொதுவாழ்வு, தன்னார்வத் தொண்டு, பொதுத் தொண்டு ஆகிய பணிகளைச் சிறப்பாகச் செய்து வரும் பெருமக்களை ஊக்கப்படுத்தும் வகையில் தென்மண்டலத்தில் பணி செய்து வரும் தக்க பெருமக்களைக் கண்டறிந்து தேர்வு செய்து ஆண்டுதோறும் அவர்களைப் பாராட்டிச் சிறப்பித்து வருகிறது.

இவ்வகையில் இந்த ஆண்டு நமது வணக்கத்திற்கும் வழிபாட்டுக்குமுரிய குன்றக்குடி ஆதீனம் 46வது குருமகாசந்நிதானம் தவத்திரு பொன்னம்பல அடிகள் பெருமான் அவர்களுக்கு சிறந்த சமூகநலத்தொண்டு செய்தமைக்காக தென்மண்டல அமைப்பு தேர்வு செய்து பெங்களூரு சேஷாத்திரிபுரத்தில் மேலாண்மைக் கல்வி நிறுவனக் கலையரங்கில் 24, 25.5.2014இல் நடைபெற்ற தெண்மண்டல (SIRC) த்தின் நான்காம் ஆண்டுக் கருத்தரங்கில் 24.5.2014 மாலை 4 மணியளவில் "ஸ்ரீமகாத்மா ஜோதிராவ் பூலேய்" என்னும் விருது வழங்கிப் பாராட்டிச் சிறப்பித்தது.

இவ்விழாவில் பெங்களூரு மனிதஉரிமை ஆணையத்தின் மேனாள் தலைவர் திரு. நடேஜா, டாக்டர் நீதியரசர் S.R. நாயக் சிறப்பு விருந்தினராகவும், பெங்களூரு விடுதலைவீரர் திரு. H.O. சீனிவாசய்யா, ஆந்திரா உயர்கல்வித்துறைத்தலைவர், பேரா.திரு. L. வேணுகோபால் ரெட்டி ஆகியோரும் விருந்தினராகவும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

ஆந்திரா, கர்நாடகம், கேரளம், தமிழ்நாடு ஆகிய நான்கு மாநிலங்களிலிருந்தும் வருகைபுரிந்து அமர்ந்திருந்த அவையினரில் பெரும்பாலோர் பேரறிஞர்கள், அவர்களுள் தமிழறிந்தோர் சிறுபான்மையினர். ஆதலின் நமது அடிகளார் பெருமான் தமது ஏற்புரையை ஆங்கிலத்திலேயே பேசினார்கள். இவர்களது ஆங்கில உரை அனைவர் உள்ளங்களையும் ஈர்த்து மகிழ்வித்தது.

இவ்விழாவில் காரைக்குடி மத்திய மின்வேதியியல் ஆய்வகத்தின் மேனாள் இயக்குநர் பேரா.திரு. கே.ஐ.வாசு, குன்றக்குடித் திட்டக்குழுத் தலைவர் திரு.டாக்டர். கே.பாலகிருஷ்ணன், தவத்திரு குன்றக்குடி அடிகளார் மகளிர் கல்வியியல் கல்லூரி செயலர் திரு.டாக்டர். எஸ்.மோகன், பெங்களூரு கணினிப் பொறியாளர் திரு. க.தணிகைமுருகன், குன்றக்குடி ஆதீனப் புலவர் திரு.க. கதிரேசன், ஆகியோரும் கலந்து கொண்டனர்.

இந்நிகழ்ச்சியை தென்மண்டலச் செயலாளர் பேரா.திரு. M.C. ரேடியப்பா ரெட்டி அவர்கள் மிகவும் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

– சு. செல்வராஜ்

---

## பெரும்புலவர் பேராசிரியர். பா. நமசிவாயம் மறைவு

திருப்புத்தூர் ஆறுமுகம்பிள்ளை சீதையம்மாள் கல்லூரி முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பெரும்புலவர் பேராசிரியர் பா.நமசிவாயம் அவர்கள் 2.7.2014 புதன்கிழமை அதிகாலையில் காலமானார். இப்பெருமகனார் நாடுபுகழ் நல்ல இலக்கியச் சொற்பொழிவாளர். குன்றக்குடி ஆதீனத்தின் திருப்புத்தூர்த் தமிழ்ச்சங்கச் செயலாளராகப் பலஆண்டுகள் பணியாற்றியவர்.

அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெருமான் பறம்புமலை வள்ளல் பாரிவிழாவில் "பெரும்புலவர்" பட்டம் பெற்ற தமிழறிஞர்; குன்றக்குடி ஆதீனத்தின் உழுவலன்பர்களுள் ஒருவராக விளங்கியவர். இவர் தம் மறைவு தமிழுலகுக்குப் பேரிழப்பாகும். இவர்தம் மறைவுகுறித்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது.

இப்பெருமகனாரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்கிறது. மறைந்த பெரும்புலவர் பேரா.பா.நமசிவாயம் அவர்களின் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதிபெற இறைஞ்சுகிறது.

குன்றக்குடி

அருள்தரு சண்முகநாதப் பெருமான்

# விசாகவிழா

குன்றக்குடியில் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு வைகாசி விசாகவிழா 11.06.2014 புதன்கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது. அன்று காலை 7.30 மணியளவில் மலைக் கோயிலிலிருந்து அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெட்டிவேர்த் திருக்கோலத்துடன் புறப்பட்டு முத்துக்குடை நிழற்ற இருபக்கமும் சாமரங்கள் வீச மேளதாளத்துடன் குன்றக்குடி கீழரதவீதி வழியாக ஆதீனத்திருமடத்திற்கு எழுந்தருளினார். அதுபோது கீழரதவீதி - தெற்குரதவீதி சந்திப்பில் ஆதீனத் திருமடத்திலிருந்து மேளதாளங்களுடன் அன்பர்கள், மங்கல மகளிரும் - ஆடவரும், சீர்வரிசை ஏந்தி எதிர்நோக்கி அணிபெறச் சென்று பெருமானைத் திருமடத்து முகப்புக்கு அழைத்து வந்தனர். திருமடத்து முகப்பில் 46ஆவது திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் எதிர்கொண்டு பூரணகும்ப மரியாதையுடன் தீபாராதனை செய்து அருள்தரு காளத்திநாதர் சந்நிதியில் சென்று தீபாராதனை செய்து வழிபட்டார்கள். அதன்பின் அருள்தரு சண்முகநாதப் பெருமான் ஆதீனக் கொலுமண்டபத்தின் நீராழி மைய மண்டபத்திற்கு எழுந்தருளினார். அதுபோது ஆறு கவிஞர்கள் பெருமானுக்கு வரவேற்புத் தமிழ்க் கவிமாலை சூட்டினர்.

நண்பகல் 11.30 மணியளவில் பெருமானுக்குத் திருமுழுக்காட்டுத் தொடங்கி நிறைவுற்று 12.30 மணியளவில் பச்சை சாத்துப்படிசெய்து சிறப்பு வழிபாடு நிகழ்ந்தது. இந்த நிகழ்ச்சியில் நூற்றுக்கணக்கான மெய்யன்பர்கள் கலந்து கொண்டு திருவருளின்பத்தில் திளைத்தனர்.

மாலை 5.30 மணியளவில் திருமடத்தின் எதிரில் அமைக்கப்பட்டிருந்த விழாக் கொட்டகையில் சுககானஜோதி இஞ்சிக்குடி திரு.டி.பி.கே. ராமதாஸ், திருவாவடுதுறை தவில் இசைத் தென்றல் இ.என்.கே. மனோகர் குழுவினர், குன்றக்குடி ஆதீன நாதசுர வித்வான் திரு.சோம. முருகேசன் குழுவினர் ஆகியோரின் நாதசுர இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது.

இரவு 7.00 மணியளவில் பாராட்டுவிழாத் தொடங்கியது. திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் தலைமை வகித்து திரு.ஆர்.சிவக்குமார் அவர்களுக்கு "அறமனச் செம்மல்" பட்டம் தந்து சிறப்பித்தார்கள். இறைநீதி அண்ணல் மேதகு நீதியரசர் திரு.எம்.சொக்கலிங்கம் அவர்கள் பாராட்டுரை வழங்கினார். திரு.ஆர்.சிவக்குமார் அவர்கள் ஏற்புரையாற்றினார். முனைவர்.சொ.சேதுபதி நிகழ்ச்சி இணைப்புரையாற்றினார். நன்றியுரைக்குப் பின் மங்கலவாழ்த்துடன் இந்நிகழ்ச்சி இனிதே. நிறைவெய்தியது.

இரவு 10.00 மணயளவில் அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெள்ளிரதத்தில் எழுந்தருளித் திருவீதியுலாப் போந்து அன்பர்களுக்கு திருவருள்காட்சி நல்க, விசாகவிழா இனிதே நிறைவேறியது.

## திருக்குறள் நா. சண்முகனார் மறைவு

உலகத் திருக்குறள் பேரவையின் பொதுச்செயலாளர் திருக்குறள் நா. சண்முகனார் அவர்கள் 8.7.2014 புதன்கிழமை காலமானார். இப்பெருமகனார் தம் வாழ்க்கை முழுதும் திருக்குறள் பரப்பும் தொண்டுக்கே ஒப்படைத்துக் கொண்டவர். திருச்சிராப்பள்ளித் திருக்குறள் கழகத்தின் ஆணிவேராகத் திகழ்ந்தவர். நமது தவத்திரு அடிகளார் பெருமான் 1973 இல் திருக்குறள் பேரவை தொடங்கிய காலம் முதல் தொடர்ந்து பேரவையின் பொதுச்செயலாளராக இருந்து தோள்கொடுத்துப் பல மாநில மாநாடுகள் வெற்றிபெற உழைத்த செயல்வீரர். இவர்தம் இழப்பு உலகத் திருக்குறள் பேரவைக்கு ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

இத்தகைய திருக்குறள் நா. சண்முகனாரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்கிறது. அவர்தம் இன்னுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறது.

- ஆசிரியர்

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி
# பரிமள விலாஸ்
# S.சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

**வாங்கி உபயோகியுங்கள்**

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**

அடிவாரம், பழநி - 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# SOAR MORE EASILY WITH...

## IB's Structured Loan Products for SMEs

**Let your enterprise grow from strength to strength with Indian Bank's entrepreneur-friendly schemes for micro, small and medium enterprises.**

**Perk up your enterprise with minimum hassles:**

- Simplified loan application form and timely disposal of applications
- Entire range of working capital assistance
- Easy assessment of working capital limit
- Term loan assistance for project finance / acquisition of plant and machinery / construction of factory buildings etc.
- Finance for artisans, village and cottage industries through composite loans
- Affordable margin requirement and competitive interest rate structure
- Excellent back up service through 100% core banking branch network (CBS)
- No collateral security for MSEs up to the limit of Rs. 5 lakhs

**IND SME Secure**
**IB BPO Finance**
**IB Ayushmaan**
**IB Star Rice Mill**
**IB Hostel Plus**
**IB Professional Plus**
**IB Travel Tours**
**IB Doctor Plus**
**IB Vidya Mandir**
**IB My Own Shop**



For further details please contact our nearest branch :

- H.O.: 66, Rajaji Salai, Chennai 600 001
- Toll Free No.: 1800 425 1400
- Email : indbank@vsnl.com



इंडियन बैंक
**Indian Bank**
Taking Banking Technology to the Common Man

www.indianbank.in

மக்கள் சிந்தனை இதழ் சந்தா மற்றும் விளம்பரங்களுக்கு

**நிர்வாகி, மக்கள் சிந்தனை, குன்றக்குடி – 630206**

தொலைபேசி எண் : 04577 - 264227

BOOK POST
Book pocket containing printed matter
MAKKAL CHINTHANAI-May - June 2014

Price Rs. 8-00
Date of Publication 24-06-2014



பெறுநர்

திரு திருவருள்திரு சுவாமிகள் அவர்கள்,
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்,
மானகிரி-(அஞ்சல்),
காரைக்குடி-(வழி). அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166